உ

குருபாதம்

# ஞானசம்பந்தம்

## தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 29 ] சர்தாரண ஆண்டு வைகாசித்திங்கள் 10—6—70 [ இதழ் 7

திருவாரூர் திருத்தேர்

*

தருமையாதீனம்

ஸ்ரீலஸ்ரீ கயிலைக்

குருமகாசந்நிதானமவர்கள்

திரு. V. S. தியாகராஜ

முதலியார் அவர்களுக்கு

பொன்னுடை போர்த்தி

ஆசி வழங்கியருளியது.

*





ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

உ

குருபாதம்

# ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள்வாக்கு

ஊட்டும் வினையிருந்தால்
உன்னுணை உன்பதத்தைப்
பூட்டிப் பிடித்தும்
புசிப்பிக்கும் — கேட்டுத்
திரியாதே வந்துதில்லைத்
தெய்வமே என்றென்(று)
எரியாதே நெஞ்சே
இரு. (88)

ஆசிரியர் :

வித்துவான்
சோமசுந்தரத் தம்பிரான்
சுவாமிகள்

துணையாசிரியர் ;

மகாவித்துவான்
சி. அருணைவடிவேல் முதலியார்

உ

குருபாதம்

# "ஞானசம்பந்தம்"

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 29 | 10–6–70 | இதழ் 7

## உட்பொருள்







உ

குருபாதம்

# ஞானசம்பந்தம்

மலர் 29 | சௌமிய – வைகாசி – 10—6—70 | இதழ் 7

திருச்சிற்றம்பலம்

பொன்றயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்றயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியினுய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே, – சம்பந்தர்.

திருச்சிற்றம்பலம்

## திருவருள் தலைவர்

யாதொரு செயலும் ஒழுங்குபெற நடத்தல் வேண்டுமாயின், அதற்குத் தலைவர் ஒருவர் இருத்தல் இன்றியமையாதது. அவ்வாறு இல்லையேல், 'தடி எடுத்தவன் தண்டற்காரன்' என்பதுபோலச் செய்வார் செய்வனவெல்லாம் செய்கையாய், முடிவில்லாமற்போகும். இதனை உலகியலில் நாம் நன்கு காண்கின்றோம். அஃதாவது, தனிப்பட்ட குடும்பமாயினும், பல குடிகள் நிறைந்த நாடாயினும் அவற்றின் செயல்முறைக்குத் தலைவர் ஒருவர் வேண்டப்படுகின்றனர். பண்டைக் காலத்தில் முடியரசர் விளங்கியதும், இக்காலத்தில் குடியரசுத் தலைவர் விளங்கிவருவதும் இம்முறையிலேதான்.

இனிக் கல்விக் கழகங்கள், நூலாராய்ச்சி அவைகள், கூட்டு வாணிகங்கள் முதலியனவும் நன்கு நடைபெறுதற் பொருட்டு அவற்றைச் சார்ந்தவர்கள் தங்களுக்குள் ஒரு தலைவரை ஏற்படுத்திக்கொள்ளுதல் கண்கூடு. 'கடவுள் ஒருவர் இருக்கின்றார்' என்பதைக் கருதலளவைகொண்டு துணிவதும் இம்முறையிலேதான். அஃதாவது, காணப்பட்ட இவ்வுலகம் சில ஒழுங்குகளுக்கு உட்பட்டே நடக்கின்றதை யாவரும் காண்கின்றனர். அவ்வொழுங்கினை, 'இயற்கை நியதி' என்கின்றார்கள். 'இயற்கை' என்பதும், 'நியதி' என்பதும் ஒன்றுக்கொன்று மாறுபட்டவை. அஃதாவது, இயற்கையாயின் நியதியாதல் இயலாது. நியதியாயின் இயற்கையாதல் இயலாது. எங்ஙனமெனின், ஒருவரை நாம் ஓரிடத்தில் குறித்த நேரத்தில் தவறாது சந்திக்க வேண்டுமாயின், அவரும் நாமும் முன்பே கலந்து பேசி அத்தகைய ஓர் ஏற்பாட்டைச் செய்துகொள்ளுதல் வேண்டும்; அல்லது அவரே யாதேனும் ஒரு காரணம்பற்றி அவ்விடத்தில் அந் நேரத்தில் வருபவராயிருப்பின், நாம் அதனை அறிந்து அந் நேரத்தில் அவ்விடத்தில் தவறாது போதற்கு நம்மை ஆயத்தம் செய்துகொள்ளுதல் வேண்டும் இரண்டும் இல்லையேல், இருவரது சந்திப்பும் எதிர்பாராதவகையில் ஒருகால் நிகழ்ந்தால் நிகழலாமேயன்றி, எதிர்பார்க்கின்றபடி தவறாது நிகழும் என்று சொல்ல இயலாது. எதிர்பார்க்கின்றபடி தவறாது நிகழ்வதற்கே 'நியதி' என்பது பெயர். உலகில், 'இயற்கை' என்று நாம் சொல்கின்றவை பல, நாம் எதிர்பார்க்கின்றபடி தவறாது நிகழ்கின்றன. காலையில் இத்தனைமணிக்குச் சூரியன் உதயமாகும்; இத்தனை மணிக்கு மறையும்; இன்ன நாட்களில் கடுவெயில் எறிக்கும்; இன்னநாட்களில் மழைபொழியும்; இன்னநாட்களில் பனிபெய்யும்; இன்னநாளில் இரவில் நிலவு காயும்; இன்னநாட்களில் இரவில் இருள் சூழும்; இன்ன நாட்களில் கிரகணம் சம்பவிக்கும் என்று எதிர்பார்க்கின்றோம்; அவை அங்ஙனமே நிகழ்கின்றன. ஆகவே, இவற்றை, 'நியதி' என்று சொல்லத் தடையில்லை. எனவே, 'இந் நியதி ஓர் ஏற்பாட்டின்படி நிகழவேண்டுமல்லது, இயற்கையில் நிகழ்ந்துவிடாது' என்று துணிவதுதான் அறிவுடைமை. அன்னதோர் ஏற்பாட்டைச் செய்து அதனை நடைபெறுத்துகின்ற தலைவன் ஒருவன் இருத்தல் வேண்டும்: அவனே, 'கடவுள்' எனப்படுகின்றான் என்கின்றனர் அறிஞர்.

இக்காலத்தில் விளங்கும் குடியரசுத்தலைவர்க்குமட்டுமன்றி முற்காலத்தில் வாழ்ந்த முடியரசர்க்கும் அத்தலைமையினை வழங்கினவர் மக்களே என ஆராய்ச்சியாளர் கருதுவர். அது பொருந்துவதே என்றாலும், தலைமையை மக்கள் தருவதன்றித் தலைமைக்குரிய தகுதியை மக்கள் தருவதில்லை. அஃது அவர் களிடம் இயல்பாய் அமைதல் வேண்டும். அவ்வமைப்பை, 'இயற்கை' என்று நாம் கூறினும் 'இறைவன் திருவருள்' என்றே ஆன்றோர் கூறுவர். இனித் தலைமைக்குரிய தகுதி யிருப்பினும் அத்தகுதியுடையோர் யாவரும் தலைவராய்விடுதல் இல்லை. ஒரு சிலரே தலைவராகின்றனர். இதுவும் இறைவன் செயல் என்பதே ஆன்றோர் துணிபு. ஆகவே, யாதொரு தலைமையும் இறைவன் தரக் கிடைப்பதல்லது வேறில்லை என்பது விளங்கும். அங்ஙனம் கிடைக்கப்பெறுதல் புண்ணி யத்தின் பயனாலாம் என்பதும், அப்புண்ணியம் உடையவ ரிடத்தில் இறைவன் தனது அதிகார சத்தியை வைத்து அவர் வாயிலாகச் செயலை நடத்துகின்றான் என்பதுமே சைவ சித்தாந்தத்தின் கொள்கைகள். மால், அயன் முதலிய தேவ ரது தலைமைகளும் இத்தகையனவே.

"அரசனும் செய்வது ஈசன் அருள்வழி"

"உரைத்தஇத் தொழில்கள் மூன்றும்
மூவருக்கு உலகம் ஓத
வரைத்தொரு வனுக்கே யாக்கி
வைத்ததிங் கென்னை யென்னின்
விரைக்கம லத்தோன் மாலும்
ஏவலால் மேவி னோர்கள்
புரைத்ததி கார சத்தி
புண்ணியம் நண்ண லாலே"

என்பன சிவஞான சித்தி.

இவ்வாறு இறைவன் மக்கட்கும், தேவர்கட்கும் வழங்கும் தலைமைகள் பலவாம்.

இறைவனது சத்தி ஒன்றேயாயினும், அது காரியத்தால் பலவகைப்படும். அவை அனைத்தும் 'திரோதானம், அருள்' என இருவகைப்படும். அவற்றுள் திரோதான சத்தி வகையில்

தரப்படும் தலைமை உலகியல் தலைமை. அதனைப் பெறு வோர் அறநெறித் தலைவர் அல்லது நீதித்தலைவராவர். அருட் சத்தி வகையில் தரப்படும் தலைமை அருள்நெறித் தலைமை யாகும். அதுவே ஆசாரியத் தன்மை அல்லது குருமூர்த்தம். அதனைப் பெறுவோர் திருவருள் தலைவராவர். ஏனெனில், இறைவன் பக்குவான்மாக்கட்குத் தான் செய்யும் திருவருளை அவர்கள் வாயிலாகவே செய்வான்.

" துரியங் கடந்தசுடர்த் தோகையுடன் என்றும்
பிரியாதே நிற்கின்ற பெம்மான் — துரியத்தைச்
சாக்கிரத்தே செய்தருளித் தான்செய்யுந் தன்மைகளும்
ஆக்கியிடும் அன்பர்க் கவன் "

என்பது திருக்களிற்றுப்படியார். 'இவ்வாசிரியத் தன்மை யைச் சாக்கிரத்தே அதீதத்தைப் புரியும் நிலையுடையார்க்கே இறைவன் வழங்குவன்' என்பது மேற்காட்டிய செய்யுளில் கூறப்பட்டது.

இத்தகைய திருவருள் தலைவர் இருதிறப்படுவர். அவர், இறைவன் அவ்வப்பொழுது முன்னின்று அருள்புரிந்து ஆசிரியராக்கப் பெறுபவரும், தனது உலகத்தில் வாழும் முத்தர்களின்வழி ஒருவர்பின் ஒருவராகத் தொடர்ந்து தலைமை பெற்று வருபவரும் ஆவர். அவருள் முன்னர்க் கூறப் பெற்ற வரே சமய குரவர். பின்னர்க் கூறப்பெற்றவர் சந்தான குரவர். 'சந்தான குரவர்' எனப்படும் திருவருள் மரபுகள் தமிழ்நாட்டில் பல உள. அவற்றுள் திருக்கயிலையில் சீகண்ட பரமசிவன் நந்திதேவர் வாயிலாகச் சனற்குமாரர்வழி வைத்த மரபே மெய்கண்ட சந்தானமே சிறப்புடன் விளங்கிவரு கின்றது. இத்திருக்கயிலாய பரம்பரையில் கமலை ஞானப்பிர காசர்தம் அருள்மாணுக்கராய் ஆசிரியத் தன்மை எய்திய பேரருளாளர் ஸ்ரீ குருஞானசம்பந்தர். இக்குருமூர்த்திகளால் திருவப்பெற்று விளங்கிவருவதே தருமையாதீன ஞானபீடம்.

இஃது அன்றுதொட்டு இன்றுகாறும் நிலவுலகில் அரு ளொளியோடு அறிவொளி, அறவொளியையும் மக்களிடையே பரப்பி விளங்குகின்றது. ஆண்டுதோறும் இங்கு ஆதிபரமா சாரியராகிய ஸ்ரீ குருஞானசம்பந்தரது குருபூஜை விழா மிகச்

சிறப்பாக நடைபெறும். இதுபொழுது இப்பீடத்தில் எழுந் தருளியிருந்து அருளாட்சி செலுத்திவரும் 25 ஆவது குரு மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணியவர்கள் இக் குருபூசை விழா பலவகையில் சிறப்புற்று விளங்க அருள் பாலித்து வருகின்றார்கள்.

அண்மையில் நிகழ்ந்த இவ்விழா அன்பர் பலர்க்கும் கண் ணிற்கும், காதிற்கும் மட்டுமன்றி அறிவிற்கும் பெருவிருந்தாய் அமைந்தமையை அன்பர் பலரும் துய்த்து அருளின்பத்தில் திளைத்தனர். தமிழகத்தின் அமைச்சர்கள், நீதிபதிகள் முதலிய பலதுறைப் பெருமக்களும் விழாவில் பங்கு பற்றி மகிழ்ந்தனர். இலக்கிய இலக்கணங்களோடு, சாத்திரத்தில் வல்ல புலவர் பெருமக்கள் பட்டி மண்டபம், கருத்தரங்கு, உரையரங்கு முதலியவற்றால் தங்கள் ஆய்வு மிக்க அருங் கருத்துக்களை மக்கள் முன்னே விளக்கிப் பயனுறச்செய்தனர்.

இசைவாணர்களது இசையரங்கும், இன்னிசைச் சொற் பொழிவுகளும் செவிவழி நுகரும் தீஞ்சுவை அமுதமாய்த் திகழ்ந்தன. இவை அனைத்தும் ஆதீனத்தில் உள்ள திருநெறிய தெய்வத் தமிழ் மன்றத்தில் திருநெறிய தெய்வத் தமிழ் மாநாடாக நடைபெற்றமை திருக்கயிலாய பரம்பரையின் திருநெறிக்கு ஏற்றனவாய் விளங்கினமை குறிப்பிடத்தக்கது.

இத்தகைய பெருஞ்சிறப்புக்களால் திருவருள் நெறியை உலகில் பரப்பிவரும் தருமையாதீனத்தின் திருப்பணிகள் பல வற்றிலும் திருவருட்பற்றுடைய அன்பர் பலரும் பங்குகொண்டு பயன்பெறுதல் இன்றியமையாதது. வாழ்க தருமையாதீனம்! வளர்க அதன் திருப்பணிகள் !



உ
குருபாதம்

குருவருள்

# அருள்நெறியும் அறநெறியும்

## தோத்திரமும் சாத்திரமும்

### உள்ளம் கவர் கள்வன்

சைவ சமயத்திற்கு இரு கண்கள்போல அமைந்த, 'தோத்திரம், சாத்திரம்' என்னும் இரண்டனுள் தோத்திரம் இலக்கியம் போன்றது; சாத்திரம் இலக்கணம் போன்றது. இலக்கணம் இல்லாமல் இலக்கியத்தை நன்கு உணர இயலாதது போல, சாத்திரம் இல்லாமல் தோத்திரத்தை நன்கு உணர்தல் இயலாது. இலக்கணத்திற்கு முதல் இலக்கியமாதல் போலச் சாத்திரத்திற்கு முதல் தோத்திரமே. இலக்கியம் இல்லையேல் இலக்கணம் இல்லாதது போல, தோத்திரம் இல்லையேல் சாத்திரம் இல்லை. எனினும் இலக்கணத்தைக் கொண்டே இலக்கியத்தை உணர்வதுபோலச் சாத்திரத்தைக் கொண்டே தோத்திரத்தை உணர்தல் வேண்டும்.

'தோத்திரம்' எனப்படும் திருமுறைகளுள் முன்நிற்பவை தேவாரத் திருப்பதிகங்கள். அவற்றுள்ளும் முன்நிற்பவை திருஞானசம்பந்தரது திருப்பதிகங்கள். அவற்றுள் முதலாவதாய் எல்லாத் திருமுறைகட்கும் முன்னாய் நிற்பது, "தோடுடைய செவியன்" எனத் தொடங்கும் திருப்பதிகம். 'இதன் பெருமை அளவிடற்கரியது' என்பதைச் சேக்கிழார் நன்கு புலப்படுத்தியுள்ளார். இதன் வரலாறும் நன்கறியப்பட்டது.

சோழநாட்டில் உள்ள சீகாழிப் பதியில் அந்தணர் குலத்தில் கவுணிய கோத்திரத்தில் திருவவதாரம் செய்த ஆளுடைய பிள்ளையார் தமது மூன்றும் ஆண்டுத் தொடக்கத்திலே தம் தந்தையாருடன் சென்று அவரால் திருக்கோயில் பிரம தீர்த்தக் கரையில் இருத்தப் பெற்று, அவர் நீரில் முழுகியபொழுது அவரைக் காணாமையே ஓர் காரணமாகத் தோணியப்பரது

சிகரத்தைப் பார்த்து 'அம்மே! அப்பா!' என்று அழைத்து அழுதபொழுது தோணியப்பர் பெரிய பெருமாட்டியுடன் விடையின்மேல் எழுந்தருளிவந்து அம்மையது அருட்டிருப் பாலை உண்பித்தருள, முழுகிக் கரையேறிய தந்தையார், 'யார் கொடுத்த பாலை நீ உண்டாய்? உனக்கு இதனை அளித்தவரைக் காட்டு' என்று வெகுண்டு, சிறு கோல் ஒன்றால் அச்சுறுத்திக் கேட்கப் பிள்ளையார் அப்பொழுதே தம்மைப் பால் கொடுத்து ஆட்கொண்ட இறைவரை உயர எடுத்த வலத்திருக்கையாற் சுட்டி, 'இது செய்தவன் பிரமாபுர மேவிய பெம்மானாகிய இவனே' என அவனது அடையாளங் களுடன் சாற்றிக் காட்டிய திருப்பதிகமே இது என்பது, திருத் தொண்டர் புராணம் முதலிய அருள்நூல்கள் பலவற்றாலும் அறியக் கிடப்பது.

இத் திருப்பதிகம் பிள்ளையாரது உள்நிறைந்து பொழிந் தெழுந்த உயர் ஞானத்தின் மறுவடிவே என்பதும், அதனால், இறைவன் திருமொழி எனப்படுகின்ற எழுதாக் கிளவியாகிய வேதத்தோடு இஃது ஒருநிகரான எழுதும் மறை என்பதும், அவ்வுண்மை புலப்படவே ஓங்காரத்தின் முதலாகிய 'ஓ' என்னும் உயிரெழுத்தை, எழுது மறைமொழியாகிய 'தமிழ்' என்பதற்கு முதலாய் உள்ள தகரமெய்யோடு கூட்டித் தொடங்கப்பட்டது என்பதும், இத்தன்மைகள் பலவும் இறை வன் திருவுள்ளத்திற்கு ஏற்புடையனவாதல் புலப்படுதற்கு முதற்கண் அவனது திருச்செவியே சிறப்பிக்கப்பட்டது என்பதும் சேக்கிழாரது திருமொழியில் எடுத்துக் கூறப்பட்டன.

இம் முதல் திருப்பதிகம், ஞானசம்பந்தரால் தம் தந்தை யார்க்குத் தமக்குப் பால்கொடுத்தவர் இவர் எனக் காட்டுதற் பொருட்டே அருளிச்செய்யப்பட்டதாயினும், அக்கருத்து இத்திருப்பதிகத்துள் வெளிப்படைப் பொருளாக வைக்கப் படாமல், குறிப்புப் பொருளாகவே வைக்கப்பட்டுள்ளது. அஃதாவது, ஞானசம்பந்தர் இதனைத் தம் கூற்றாக நேரே அருளிச்செய்யாமல்; பிரமாபுரம் மேவிய பெம்மானால் கவரப் பட்டு, அச்சமும், நாணும், மடனும் முந்துறுத்த பெண்மைப் பண்புகளை இழந்து' நின்றாள் ஒரு தலைவியை அவளது நிலை கண்ட தோழி, 'நீ பண்டைய நிலைமையை உடையவளாய் இல்லை. எவனோ ஒரு தலைவன்பால் நின் உள்ளத்தைப் பறிகொடுத்துக் கண்டார் அனைவரும் உன்னை, 'பிச்சி' என்று

ஏசும் நிலையை அடைந்து நிலைகுலைந்து நிற்கின்றாய்; இவ்வாறான நிலையை நீ அடையச்செய்தவன் யாவன்? அவன் எங்கே இருக்கின்றான்? அவனைக்காட்ட வல்லாயோ' என்று வினவ, அத்தலைவி, தோழிக்குப் பட்டாங்குரைத்து நேரே அறத்தொடு நிற்பாளாய், 'என்னை இந்நிலைக்கு உள்ளாக்கியவன் அதனைச் செய்துவிட்டு வேறெங்கும் போய்விடவில்லை. இங்கே இதோ நின்றுகொண்டுதான் இருக்கின்றான்' என்று காட்டும் முறையில் மறைமுகமாகத்தான் அருளிச்செய்தார்.

அங்ஙனம் அத்தலைவி, 'என் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட தலைவன் இதோ நிற்கின்றான்; பார்' என்று கை விரலால் நன்கு சுட்டிக் காட்டியும் தோழி அத்தலைவனைக் காணமாட்டாதவளாய் 'எங்கே அவன்? எங்கே நிற்கின்றான்' என்று ஆவலுடன் கேட்க, தலைவி, 'அதோ நிற்கின்றான்; பார். அவன் ஒரு காதில் பெண்களுக்குரிய 'தோடு' என்னும் அணியை அணிந்துள்ளதும், காளைமேல் ஏறியிருப்பதும், தலையில் பிறைசூடி இருப்பதும், சுடுகாட்டுச் சாம்பலை உடம்பில் நறுமணப் பொருள் பல கூட்டிக் குழைத்த சந்தனம்போலப் பூசியிருப்பதும் ஆகிய பித்துக்கோலம் உனக்குப் புலனாகவில்லையா?' என்று அடையாளங்களுடன் காட்டினாள். அப்பொழுதும் தோழிக்குத் தெரியவில்லை. அதனால், அவள் தலைவியை நோக்கி, 'தோழீ, என்ன விளையாடுகிறாய்? ஏதோ இல்லாததைச் சொல்லி என்னை வஞ்சிக்கப்பார்க்கிறாய். உண்மையைச் சொல். உன்னை நிலைகுலையச் செய்தவன் இன்னான் என்பதை மறையாமற் சொல்லிவிடு' என்று சிறிது வருத்தத்துடன் கேட்டாள்.

தலைவி, 'தோழீ, நான் பொய் கூறவுமில்லை; உன்னை வஞ்சிக்கவும் இல்லை. என்னை வேறுபடுத்தியவன் எளியனல்லன். பெரிய ஒரு கள்வன். எல்லார் கண்முன்னும் அவன் நிற்பினும், அவரும் தங்கள் கண்களை நன்கு விழித்துத் துடைத்துக்கொண்டு பார்த்தாலும் காண இயலாதவாறு மறைந்தே நிற்கின்ற கள்வன். அவன் தானே தன்னைக் காட்டினாலல்லது அவனை யார் காண வல்லார்! அவன் எக்காரணத்தாலோ எனக்குத் தன்னைக் காட்டினான். காட்ட, அவனைக் கண்டபொழுதே என் உள்ளத்தை நான் காணவில்லை. அதனை நான் என் வழிப்படுத்தி எனது அச்சம்,

நாண், மடம், முதலியவற்றுடன் முன்போல நிற்குமாறுசெய்ய எத்துணையோ முயன்றும் அஃது இயலவில்லை. கண்ணிற்குக் காணப்படாமையால் கள்வனுகின்ற அவன், என் உள்ளத்தை யானறியாமலே கவர்ந்துகொண்ட வகையிலும் திறல்படைத்த கள்வனுகி விட்டான். அவனை நீ அறிவதென்ருல் அரிது தான்' என்ருள்.

அதைக் கேட்ட தோழி, 'உலகத்தில் சிலரை, தந்நிக ரில்லாத் தலைவர் என்று சிலர் தம்முள் மாறுபட்டுக் கூறிக் கொள்கின்றனர். அவையெல்லாம் வெறும் புகழுரையேயாக, நீ நின் பெருமைக்குத் தக உண்மையிலே தன் நிகரில்லாத் தலைவனை அடைந்துவிட்டாய்! உனது நல்வினை மிகப் பெரிது! ஆயினும், அவன் எங்கே இருப்பவன் என்று நீ அறிந்து கொண்டாயோ' என்று கேட்டாள். அதற்குத் தலைவி, தோழி, அவன் அயலூரான் அல்லன்; நாம் வாழ் கின்ற இப்பிரமபுரத்தில் திருத்தோணியில் வீற்றிருப்பவன் தான்' என்ருள். தோழி கேட்டுத் திகைத்துப்போனுள். இப்படி அமைந்துள்ளது இத்திருப்பதிகம். இதனை ஞான சம்பந்தர் இவ்வாறு அமைய அருளியதற்குக் காரணம், அன்று நிகழ்ந்த நிகழ்ச்சியைத் தம் கூற்ருக நேரே அமையப்பாடினுல் அந்நிகழ்ச்சியை அறிதற்குரிய ஒரு வரலாற்றுக் குறிப்பாக மட்டுமே இத்திருப்பதிகம் அமைந்துவிடும். ஆனுல், இஃது ஓதுவார் அனைவரது தொல்வினையும் எளிதில் தீரும் வாயிலாக என்றும் நின்று நிலவ வேண்டினுராதலின், இவ்வாறு அருளிச் செய்தார். மக்களையாயினும், கடவுளையாயினும் சிறப்பித்துப் பாடும்பொழுது அவரிடம் தலைவி ஒருத்தி காதல் கொண்டது போலப் புனைந்து, அவள் கூற்ருக அத்தலைவரது பெருமையை வெளிப்படுத்துதல் பழந்தமிழ் இலக்கியங்களில் கொள்ளப் பட்ட ஒரு மரபு. அதனை ஒட்டியே ஞானசம்பந்தரும் எழுது மறை மல்லல் நெடுந்தமிழால் இம்மாநிலத்தோர்க்கு உரை சிறப்ப அருளிச்செய்யத் தொடங்கிய திருப்பதிகத்தை இம் முறையிலே அமைத்தருளினுர். இவ்வாறு அமைத்த திருப் பதிகங்கள் மற்றும் பல.

இதனுள் எத்துணைப் பேருண்மைகள் இலைமறை காய் போல் பொதிந்து கிடக்கின்றன!

ஒருகாதில் தோடு உளது எனவே மற்ருெரு காதில் குழை உண்மை பெறப்படும். தோடு மகளிர் அணிவது, குழை, ஆடவர் அணிவது. எனவே, அவன் ஒருபாதி ஆணுருவும், ஒருபாதி பெண்ணுருவுமாய் இருகூறுபட்டு இயைந்து நிற்பவன் என்பது விளங்கிற்று. இது, 'முதற் பொருள் ஒன்றேயாயினும், அது 'சத்தி, சிவம்' என இருதன்மைப்பட்டு இயைந்து நிற்பது' என்னும் உண்மையைப் புலப்படுத்துவது. பின்பு ஒரு பாடலில் "ஒருமை உடையன்" என இக்கருத்து வெளிப்படையாக அருளப் பட்டது.

விடை ஏறுதலும், சுடலைப் பொடி பூசுதலும் பிறரால் விரும்பப்படாதவற்றைத் தான் விரும்புதல்போலக் காட்டி எந்த ஒன்றிலும் விருப்பு வெறுப்பு – வேண்டுதல் வேண்டாமை இலனுதலைத் தெரிவிக்கும். இன்னும் அறக்கடவுளே விடையாய் வந்தது என்பது புராணமாகலின், அஃது அறம் தானே தனித்து நிற்பதன்று; இறைவனைத் தலைவனுகப் பெற்று அவன் செலுத்தியவாறே செல்வது என்பதை விளக்குவதாம். இன்னும், விடை பசு ஆதலால், அஃது பசு எனப்படும் உயிரைக் குறித்து நின்று, உயிர்கள் அனைத்தும் இறைவனை உள்ளுயிராகப்பெற்று அவனுலே இயங்குவன என்பதும் விளங்கும். சுடலைப்பொடி, இறந்தார் உடல் அழிவிலும், அவரை எரிக்கும் விறகு முதலியவற்றின் அழிவிலும் அழியாது எஞ்சி நிற்பதாகலின், அஃது உலகெலாம் அழியும் முற்றழிப்புக் காலத்தில் எல்லாப் பொருள்களும் காரிய நிலை நீங்கிக் காரண நிலையான சத்தி ரூபமாகிய மாயையாய் நிற்கும் என்பதையும், அப்பொழுதும் அவற்றிற்கு நிலைக்களம் – தாரகம் இறைவனே என்பதையும் வெளிப்படுத்தும்.

'பிறை சூடினமை சந்திரன் தக்கனது சாபத்தால் காத்தற்பொருட்டு' என்பது புராணம் ஆதலால், அது சார்ந்தாரைக் காக்குந் தண்ணருளைக் குறிக்கும் குறிப்பாகும். இன்னும் பிறைக்கு, 'கலைமதி' என்பது பெயராதலால், அது கலா ஞானத்தைக் குறிக்கும் குறிப்பு மொழியாய், அந்த ஞானத்தின் உண்மை நிலையாகிய பரஞானத்திற்கு முதல்வனுதலையும் காட்டுவதாம்.

கள்வனுதல், பிற பொருள்போலக் கண் முதலிய பொறிகளால் காணவாராமை பற்றியும், கண்டாரை வசப்படுத்திக் கொள்ளும் தன்மை பற்றியும் என்பது முன்பே குறிப்பிடப் பட்டது. அக்கள்ளத்தனத்தால் பிறவற்றைக் கவராது உள்ளத்தைக் கவர்கின்ற கள்வன் என்றல், அவன் பக்குவான் மாக்களது பசுபோதத்தைக் கவர்ந்து பதிஞான வடிவாக்கி, அவ்வாற்றுனே பசுகரணங்கள் சிவகரணமாகச் செயற்படும் நிலையை அருளும் பெருநிலையைக் குறிப்பதாகும். இக்கள்வன் என்னும் சொல் காதற் கிழமையில் தலைவனைக் குறிக்கப் பொருந்தி நிற்பது என்பது,

> " பன்மாயக் கள்வன் பணிமொழி யன்றேநம்
> பெண்மை உடைக்கும் படை " —குறள்.

என்றும்

> " நகைக் கூட்டம் செய்தான்அக் கள்வன் மகன் "
> (கலி - குறிஞ்சி - 5)

> " கட்குத்திக் கள்வனே நீமாறு "

என்றும், பிறவாறும் வரும் அகப்பொருட் செய்யுட்களால் அறியப்படும். ஆகவே, இறைவனது இயல்பைப் புலப் படுத்தப் பயன்படுகின்ற 'கள்வன்' என்னும் சொல், இத் திருப்பதிகத்துள் எடுத்துக்கொண்ட முறைக்கேற்ப மிகப் பொருத்தமாக ஆளப்பட்டிருத்தல் அறிந்து மகிழத்தக்கது.

இவ்வாறு சொல், பொருள், இசை என்பவற்றல் இனிமை பெற அமைந்த தோத்திரத் திருப்பாடலைச் சாத்திரக்கண் கொண்டு காணும்பொழுதே உண்மை நன்கு புலனுகி நிறை இன்பங் காண முடிகின்றது. ஆகவே, சாத்திரங்கள் பலவற் றிற்கும் கருவூலமாய் அமைந்த தோத்திர அருட்செம்பாடல் களைச் சாத்திரத்தின்வழி நின்று உணர்ந்து இன்புறுதல் அறிஞர் கடனுகும்.





# திருமந்திரம் - குறிப்புரை

திருக்குறள்வேள்,

**திரு. ஜி. வரதராசப் பிள்ளை B. A.,**

( மலர் 29, இதழ் 6, பக்கம் 328 இன் தொடர்ச்சி )

70 நால்வரும் நாலு திசைக்கொன்று நாதர்கள்
நால்வரும் நானா விதப்பொருள் கைக்கொண்டு
நால்வரும் நான்பெற்ற தெல்லாம் பெறுகென
நால்வருந் தேவராய் நாதரா னார்களே.

குறிப்புரை :- நால்வர் - நந்திகள் (சனகாதி) நால்வர். திசைக்கொன்று - திசைக்கு ஒருவர். நானாவிதப் பொருள் - பல்வேறு அனுபவப்பொருள்.

நால்வரும் நான்கு திசைகளுக்கும் சென்று அனுபவத்தை வழங்கினார்கள் என்பதாம். 4

71 மொழிந்தது மூவர்க்கும் நால்வர்க்கும் ஈசன்
ஒழிந்த பெருமை இறப்பும் பிறப்புஞ்
செழுஞ்சுடர் மூன்றொளி யாகிய தேவன்
கழிந்த பெருமையைக் காட்டகி லானே.

குறிப்புரை :- மூவர்க்கும் நால்வர்க்கும் - ஆசிரியர் வழிவந்த எழுவர்க்கும். பெருமை - பெருநெறி. இறப்பும் பிறப்பும் இல்லாத பெருநெறியை ஈசன் மொழிந்தான் என்க. மூன்றொளி - சந்திரன், சூரியன், அக்கினி. கழிந்த பெருமை - குறைந்த பெருமை.

சோம சூர்யாக்கினி ரூபமாயுள்ள ஈசன் குறைந்த பெருமையைக் கொடுப்பவன் அல்லன் என்பதாம். 5

72 எழுந்துநீர் பெய்யினும் எட்டுத் திசையுஞ்
செழுந்தண் நியமங்கள் செய்யுமினென் றண்ணல்
கொழுந்தண் $பவளக் குளிர்சடை யோடே
அழுந்திய நால்வர்க் கருள்புரிந் தானே.

குறிப்புரை :- எழுந்து நீர்பெய்தல் - பெருமழை பெய்தல். நியமங்கள் - செய்கடன்கள். பவளக் குளிர்சடை - பவளம் போன்ற செம்மையான குளிர்ச்சி பொருந்திய சடை. அஃதாவது, யோகியர் வெண்ணிறப் பனி ஒளியில் நீரோட்டம்போலப் பொருந்துதலைக் காண்பர் என்க.

எத்துணை இடர் வந்தபோதும் கடமைகளைச் செய்யவேண்டும் என்று அண்ணல் நால்வருக்கு அருள்புரிந்தான் என்பதாம். 6

## 5. திருமூலர் வரலாறு

73 நந்தி இணையடி நான்தலை மேற்கொண்டு
புந்தியின் உள்ளே புகப்பெய்து போற்றிசெய்
தந்தி மதிபுனை அரனடி நாள்தொறுஞ்
சிந்தைசெய் தாகமஞ் செப்பலுற் றேனே.

குறிப்புரை :- நந்தி இணையடி - குருவினது திருவடி. புகப்பெய்து - நிறுத்தி. குரு வணக்கம் வேண்டும் என்க. அரன் அடி சிந்தை செய்து - அரனடியை அறிவினால் சிந்தித்து. இறை வணக்கம் வேண்டும் என்க.

செயல் தொடங்கும்போது குருவணக்கமும் இறைவணக்கமும் வேண்டும் என்பதாம். 1

74 செப்புஞ் சிவாகமம் என்னும்அப் பேர்பெற்றும்
அப்படி நல்கும் அருள்நந்தி தாள்பெற்றுத்
தப்பிலா மன்றில் தனிக்கூத்துக் கண்டபின்
ஒப்பில் எழுகோடி யுகம்இருந் தேனே.

குறிப்புரை :- செப்பும் சிவாகமம் - சிவாகமம் செப்பவல்லவன். அப்படி நல்கும் - அப்பெருமையினை அருளும். நந்தி - குரு. தப்பிலா மன்று - சிற்சபை, ஆகாயப் பெருவெளி. தனிக்கூத்து - ஆகாயத்தில் காணும் அணுக்களின் நடனம். கோடி - எல்லை. யுகம் - இரண்டன் சேர்க்கை.

பாடபேதம் $தவளக்.

மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்ஞை, சகஸ்ரதளம் ஆகிய ஏழு ஆதாரச் சக்கரங்களிலும் உள்ள முடிவுகளைப் பொருந்தியிருந்தேன் என்பதாம். 2

75 இருந்தவக் காரணங் கேளிந் திரனே
பொருந்திய செல்வப் புவனா பதியாம்
அருந்தவச் செல்வியைச் சேவித் தடியேன்
பரிந்துடன் வந்தனன் பத்தியி னாலே.

குறிப்புரை :- இந்திரன் - திருமூலர் மாணாக்கர். அருந்தவச் செல்வி - சிதாகாயத்தில் விளங்கும் சிற்சத்தி.

ஏழு ஆதாரங்களைப் பொருந்திச் சமாதிக்குச் செல்வோர் பேரறிவுடன் கூடி மீள்வர் என்பதாம். 3

76 சதாசிவந் தத்துவம் முத்தமிழ் வேதம்
*மிதாசினி யாதிருந் தேனின்ற காலம்
இதாசினி யா திருந் தேன்மன நீங்கி
உதாசினி யாதுட னேஉணர்ந் தோமால்.

குறிப்புரை :- சதாசிவந் தத்துவம் - சதாக்கிய தத்துவம். முத்தமிழ் - இயல் இசை நாடகம். மித ◦ அசினியாது - அளவுடன் நுகராது. இதாசினியாது - இதமான ஆசனம் இல்லாது. உதாசினியாது - பாராமுகமாய் இல்லாது.

மனம் தெளிந்து இதமான ஆசனத்தில் அமர்ந்து உதாசீனம் செய்யாது இருந்தால் தத்துவம் முதலிய உண்மைப் பொருளை உணரமுடியும் என்பதாம்.

77 மாலாங்க னேயிங்கு யான்வந்த காரணம்
நீலாங்க மேனியள் நேரிழை யாளொடு
மூலாங்க மாக மொழிந்த திருக்கூத்தின்
சிலாங்க வேதத்தைச் செப்பவந் தேனே.

குறிப்புரை :- மாலாங்கன் - திருமூலர் மாணாக்கரில் ஒருவர். மூலாங்கம் - மூலகாரணம். சீலம் - ஒழுக்கம். 5

78 நேரிழை யாவாள் நிரதிச யானந்தப்
பேருடை யாளென் பிறப்பறுத் தாண்டவள்
சீருடை யாள்சிவ னாவடு தண்டுறை
சீருடை யாள்பதஞ் சேர்ந்திருந் தேனே.

---

* பாடபேதம் : நிதாசினியாது - (நிதித்யாசனம் செய்யாது)

குறிப்புரை :- நிரதிசய ஆனந்தம் - மேலான ஆனந்தம். ஆவடு தண்டுறை = ஆ + அடு + தண்டு + உறை = ஆன் மாக்களைப் பக்குவம் செய்யும் நெறியாகிய வீணாத்தண்டில் பொருந்தி.

சுழுமுனையில் விளங்கும் சிற்சத்தியோடு பொருந்தியிருந் தேன் என்பதாம். 6

79 சேர்ந்திருந் தேன் சிவ மங்கைதன் பங்கனைச்
சேர்ந்திருந் தேன்சிவ னாவடு தண்டுறை
சேர்ந்திருந் தேன்சிவ போதியின் நீழலிற்
சேர்ந்திருந் தேன் சிவன் நாமங்கள் ஓதியே.

குறிப்புரை :- மங்கை பங்கன் - அர்த்தநாரி வடிவத்தை யுடையவன். சுழுமுனை நாடியே ஆண்பெண் தன்மையுடன் கூடியதுதான் என்க. போதி - அரசமரம். இனி, 'சிவபோதி யின் நீழலில்' என்பதற்குச் சிவ அறிவு வியாபகத்தில் என்ற பொருளும் காண்க.

சிவன் நாமங்களை ஓதினால் சிவ வியாபகத்தில் ஒடுங்கலாம் என்பதாம். 7

80 இருந்தேன் இக் காயத்தே எண்ணிலி கோடி
இருந்தேன் இராப்பகல் அற்ற இடத்தே
இருந்தேன் இமையவர் ஏத்தும் பதத்தே
இருந்தேன் என் நந்தி இணையடிக் கீழே.

குறிப்புரை :- இராப்பகல் அற்ற இடம் - திங்களும் ஞாயி றும் இயக்கம் அற்ற இடம். இஃது உணர்வும் அறிவும் தொழில்படாத நிலை. சந்திரன் உணர்வுமயம், சூரியன் அறிவு மயம்.

இடை பிங்கலைகளின் இயக்கம் இல்லாவிடின் நெடிது வாழலாம் என்பதாம். 8

81 பின்னைநின் றென்னே பிறவி பெறுவது
முன்னைநன் றாக முயல்தவம் செய்கிலர்
என்னைநன் றாக இறைவன் படைத்தனன்
தன்னைநன் றாகத் தமிழ்ச்செய்யு மாறே.

குறிப்புரை :- பின்னை - இனிமேல். என்னே, இரக்கக் குறிப்பு. முன்னை - முற்பிறவிகளில்.

முற்பிறவிகளில் தவஞ் செய்யாது பின்வருந்திப் பயனில்லை என்பதாம். 9

(தொடரும்).

# "கொழிதமிழ்க் கூடலில் கொன்றை வேணியான்"

வித்துவான். திருமதி. ப. நீலா

(மலர் 29, இதழ் 6, பக்கம் 340ன் தொடர்ச்சி)

## 30. மெய்க் காட்டியது

பாவமென வடிவெடுத்த படிற்றமணர் பழித்தழலில் எழுப்பிய பசுவை ஏறுயர்த்த ஏந்தல் ஏற்ருல் அழித்ததன்பின் மெய்க்காட்டிய விந்தையை விளம்புவோம். அனந்த குணனிடமிருந்து அரசுபெற்ற குலபூடணன் செவ்விய செங்கோல் செலுத்தும்நாளில் வல்வேடர்க்கதிபதியாய் சேதிராயனென்னும் வில்வேடனெருவன் வலிமையைப் பெருக்கிக்கொண்டு பஞ்சவன்மேல் படையெடுப்பேன் என்று பறை சாற்றிக் கொண்டு அற்றம் பார்க்கும் செய்தி அறிந்தான் வேப்பந்தார் வேந்தன். சிவந்தசடை முடியண்ணல் அடியவரே சிவமாகக் கருதியொழுகும் சவுந்தர சாமந்தன் எனும் சேனைத்தலைவர் தமையழைத்து 'எனது பொன்னறையைத் திறந்து வேண்டிய நிதிமுகந்து சேனையைப் பெருக்க வீரர்களை வரவழையுங்கள்' – என்று உத்திரவிட்டான்.

சிந்தையில் அரனிடம் கொண்ட அன்புபெருகி தென்னவன் பணித்த பணியைப் பின்தள்ளியது. அறத்தின் வழிவந்த பெருகியுள்ள செல்வத்தை ஆசைதீர அள்ளிக் கொண்டார் சாமந்தர்; அடங்கா மகிழ்ச்சியோடு ஆலயத்துள் நுழைந்து பொற்ருமரைத் தீர்த்தமாடி உள்நிறைந்த மெய்யன்பின் ஒளியுருவாய் முளைத்தெழுந்த பண்ணிறைந்த மறைப் பொருளைப் பணிந்து 'எண்ணிய காரியம் முடிக்கும் எம் பெருமானே! பழியின்றிவந்த இச்செல்வமனைத்தும் உனக்கும் உன்னடியார்க்குமாகவே ஆகவேண்டும்' - என்று புகன்று போன்றிநின்ருர்.

தருமையில் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள்
இருபத்தைந்தாம் ஆட்சி ஆண்டின் நிறைவு நாளன்று
**1—5—'70**



பெருமக்கள் பலர் சார்பில்
திருவண்ணாமலை ஆதீனம்
குன்றக்குடி ஸ்ரீலஸ்ரீ அருணாசல தேசிக பரமாசாரிய சுவாமிகள்
வெள்ளிச்செங்கோல் வழங்குதல்

சிதம்பரம் ஸ்ரீ சபாநாயகர் கோயில் ஆயிரக்கால் மண்டபத்தில்



தருமையாதீனம் 25ஆவது ஸ்ரீலஸ்ரீ கயிலைக்குருமகாசந்நிதானம் அவர்கள்
இருபத்தைந்தாம் ஆட்சி ஆண்டின் நிறைவு நாளன்று
சிதம்பரம் பொதுதீக்ஷிதர்கள் அளித்த வரவேற்பு
1—5—'70

## ஆலயப்பணிகளில் ஆர்வம் :-

திருக்கோயிலுக்கு அண்டமுகடு தொடும்படி கோபுரமும், ஆயிரக்கால் மண்டபமும் நிறுவியதோடு திருவாபரணங்கள் பலவும் செய்தளித்தார். தேவர்கள் விரும்பும் வண்ணம் வேள்விகளும், நான்மறை பயின்ற அந்தணர்களுக்கு அருஞ் சிறப்பும், துறந்தோர்க்கு ஆதரவும் என்று பல்வேறு தருமங் களில் பாண்டியனின் பணம் சென்றுகொண்டிருந்தது. எவ ரேனும் சிவச்சின்னங்களுடன் வந்தால் அவரே நம்பிறப் பறுக்க வடிவெடுத்த அரனென்று கருதி அர்ச்சித்து அறுசுவை விருந்திடுவார். இன்றைக்கு ஆயிரமும் நாளைக்கு இரண்டா யிரமும் மற்றையநாள் முன்னுளைப்போல் இருமடங்குமாக சாமந்தர் செலவுசெய்து வருவதனைத் தென்னர்பிரான் செவி மடுத்தான்.

## ஓலைவிடுத்த அழகு :

காவலன் தமது காரியமுணர்ந்தான் என்பதைக் கண்டு கொண்ட சவுந்தர சாமந்தன் அரசவைக்குச் சென்று பிற நாடுகளில் உள்ள வீரர்களுக்கெல்லாம் பணத்தையனுப்பி சேவகம்பதிய ஓலைசெல்ல விடுப்பான் போல் பாவனை செய் தான்.

எங்கும் ஓலை செல்லவிட்டு ஆறுமாதமாகியும் வீரர்கள் யாரும் வராதிருக்கவே பாண்டியன் ஐயுற்று 'நாளை வெங் கதிர் படுமுன் வீரர் யாவரும் இங்கு வரவேண்டும்' - என்று கடுமையாக அறிவித்துவிட்டான். சேனைத் தலைவர் குன்றெருத்த நிதியமெல்லாங்கொண்டு பணிகொண்ட கொன்றைவேணி யானின் பாதகமலங்களில் வீழ்ந்து, 'அடியவர் குறைவு தீர்த் தாண்டருள்வதே விரதம்பூண்ட கொடியணி மாடக்கூடற் கோமானே! எனது இடர்நீங்க இன்னருள் தந்தருள்க! - என்று வேண்டிய வேண்டுகோளுக்காக தெய்வ வாக்கொன்று கேட்டது. அளக்க முடியாச் சேனையோடு நாளை நாம் தோன்றுவோம் - அஞ்சற்க! என்று பெருமான் ஒலிதந்துதவி ஞன். சவுந்தர சாமந்தன் உச்சிமேற் கரங்குவித்து உவகை வெள்ளத்திலாழ அலர்க் கதிர்க் கதிரவனும் முந்நீருள் ஆழ்ந் தான்.

## சிவபரஞ்சுடரோன் புரவிமேல் வந்தான் :

மீனவனுக்குக் காட்டுவதற்காக மேருவில்லி தன் தமரை யெல்லாம் மானவேல் மறவராக்கித் தானுமோர் வீரனுகக் கோலங்கொண்டான். அவனது நாடகத்திற்கிட்ட திரை போன்றிருந்த இருள் மெதுவாக அகன்றது. அன்பனெரு வனுக்காக அண்ணல் குதிரைச் சேவகனுக வரும் கவினைக் காணக் கதிரவன் குணதிசையில் தோன்றினுன்.

" தெருட்டரு மறைகள் தேருச் சிவபரஞ் சுடரோ னன்பன்
பொருட்டொரு வடிவங் கொண்டு புரவிமேற்
கொண்டு போதும்
அருட்படை யெழுச்சி காண்பான் போலஆர்கலியின் மூழ்கி
இருட்டுகள் கழுவித் தூய இரவிவந் துதயஞ் செய்தான் "

சவுந்தர சாமந்தன் கூடற் பெருமானைக் கும்பிட்டு நம்பிக் கையோடு அரண்மனை சேரவும் பிறை முடியண்ணல் தன்பூத கணங்களை வீரர்களாக்கி அழைத்து வரவும் சரியாக இருந்தது. வார்கெழு கழற்கால் நந்தி, மாகாளன், பிருங்கி, நிகும்பன், கும்போதரன் முதலிய தலைவர்கள் கவசவடிவினராய் வருகிருர் கள். கற்றைச் சாமரைகள் நெருங்கிவர காரொலி நாணத் தூரிய முழங்க, கொற்றப்போர் விடைதன்னையே பரியாக் கொண்டு ஒற்றைச் சேவகராய் மாறியாடிய ஒருவர் வந்தார்.

## மெய்யைக் காட்டக் கண்டான் :

சேனைப் பெருக்கம் மதுரையை நோக்கி வர சாமந்தன் கண்டு மகிழ்ந்து வேந்தனுக்குக் கூற, அவனும் அவற்றைக் காண்பதற்காக மேன்மாட மண்டபம் வந்தமர்ந்தான்

வந்துள்ள வீரர்களைத் தனித்தனியாகக் காட்டுக என்று அரசன் ஆணையிட - சவுந்தர சாமந்தன் அணியணியாய் நிற்கும் வீரர்களைப் பிரம்புகொண்டு சுட்டி இவர் கொங்கர்; இவர் குருநாடர்; இவர்கள் கங்கர்; இவர்கள் கருநாடர்; அவர்கள் அங்கர்; அதோ ஆரியர்; இங்கே வங்கர்; இப் புறம் மாளவர் இன்னும் கொங்கணர், குலிங்கர், கலிங்கர், கவுடத்தவர், கொல்லர், கூர்ச்சரர், பல்லவர், பப்பரர், மாகதர், மராடர் இவர்களும் உண்டு என்று அவரவர்கள் மெய்யைக் காட்டிக் கூறினுன்

இவ்வளவு சேனைவீரர்களையும் அழைத்த நும் திறமை பாராட்டற்குரியது என்று பாண்டிப்பிரான் சேனைத் தலைவனைப் பாராட்டினன். பழியின்றி ஈட்டிய உமது செல்வம்தான் இத் துணைக்குங் காரணமென்று பணிமொழி புகன்றார் தலைவர்.

அந்நெடுஞ் சேனையுள் அடல்மாவூர்ந்து பின்னுற நிற்கும் அவ்வொற்றைச் சேவகர் யாரென வேந்தன் கேட்க - அவரை நான் இப்பெரிய கூட்டத்துள் அடையாளங் காண்பதெப்படி எனப் பணிந்து அரசனருகில் வரும்படி அவருக்குச் சைகை காட்டினன். அன்பு வலைப்பட்ட அண்ணலும் அருகுவந்து அரசனளித்த நவமணிக் கலன்களையும், பொன்னுடைகளையும் ஏற்றுக்கொண்டு அவற்றைத் தமர்க்கெல்லாங் கொடுத்தார். பின்பு தனது குதிரையை ஐந்து கதிகளிலும் நடத்திக்காட்டிக் கொண்டிருந்த நேரத்தில் சில ஒற்றர்கள் வந்து பகைவன் சேதிராயன் வேட்டையாடச் சென்றிருந்தபோது புலியால் அடித்துக்கொல்லப்பட்டான்; நம்பகையொழிந்தது என்று தெரிவித்தனர், காவலனும் களிப்புற்றுச் சேனைகளுக்குப் பின்னும் பல பரிசில் ஈந்து இனி அவரவரையும் அவரவர் தேசங்களுக்குத் திருப்பியனுப்பிவிடலாம் என்று ஆணையிட் டான். சவுந்தர சாமந்தன் அப்பணியை நிறைவேற்றுவான் போலே பாவனைசெய்ய - நான்மாடக் கூடல் நாயகன் தன் தானையோடு அங்குநின்றபடியே மறைந்தான். பொருநை நாடன் பெருவியப்புற்று இவ்வாடலைச் செய்தது நம் கூடல் நாயகனன்றோ! என்னே சாமந்தனின் அன்பு. அவனுக் காக இறைவன் இதனைச் செய்தானெனநூல் அவனே எனக் கிறைவன் என்று தானைத்தலைவனைக் கொண்டாடி பகை யொழிந்து வாழ்ந்தான் பல்லாண்டு. (வளரும்)

---

EXTRACT FROM THE VISITORS' BOOK

Dharmapuram Adhinam

Sri Sattanathaswami Devasthanam, Sirkahzi.

"It was an inspiring experience to worship at this temple, hallowed among other details by its association with Saint Tirugnanasambandar. The premises of the temple are kept very clean and this also impressed me much."

(Sd ) G. V. Narayanan,
D. I. G. of Police, Tiruchi.

14—5—70.

# சிவாகம ஸார ஸர்வஸ்வம்

சிவாகம வித்துவான், சிவாகமரத்னுகரம்,

**சிவஸ்ரீ. S. சுவாமிநாத சிவாசாரியார்**

( மலர் 29. இதழ் 4. பக்கம் 259. இன் தொடர்ச்சி )

அர்க்கியம் :- பால், ஜலம், தர்ப்பைநுனி, அரிசி, புஷ்பம், எள், யவதான்யம், வெண்கடுகு என்ற இந்த எட்டுத் திரவியங்களேயும் அர்க்கிய பாத்திரத்திலிட்டு, ஆஸனம், மூர்த்தி, மூலம், அங்கம் மறுபடி மூலமந்திரம் பூஜித்து அபிமந்திரணம் செய்து சிரசில் ஸ்வாகாந்தமாகக் கொடுக்கவேண்டும்.

சாமான்யார்க்கியம் :- பாத்திரத்தில் ஜலம்விட்டு ஒரு புஷ்பம் போட்டு சந்தனம் அக்ஷதை இட்டு ஏழு தடவை பிரணவ மந்திரத்தை அபிமந்த்ரணம் செய்யவேண்டும்.

சங்கபூஜை :- சங்கத்தில் ஜலம் அக்ஷதை புஷ்பம் சந்தனமிட்டு சிவ மூலமந்திரத்தால் அபிமந்திரணம் செய்ய வேண்டும்.

நிரோதார்க்கியம் :- பாத்திரத்தில் ஜலம்விட்டு சந்தனம் அக்ஷதை புஷ்பமிட்டு ஆஸனம் மூர்த்தி மூலம் பிரம்மம் அங்கம் இவைகளேப் பூஜித்து உத்வாஸன காலத்தில் உபயோகிக்க வேண்டும். பொதுவாக எல்லா அர்க்கியஸ்தான முடிவில் நிரீக்ஷணம் ப்ரோக்ஷணம் தாடனம் அப்யுக்ஷணம் அவகுண்டனம் தேனுமுத்திரை இவற்றை அதனதன் மந்திரத்துடன் செய்யவேண்டும்.

ஜலத்தின் அபிஷேகத்தினுல் பத்து அபராதத்தையும், க்ஷீரத்தினுல் நூறு அபராதத்தையும், தயிர் அபிஷேகத்தினுல் ஆயிரம் அபராதத்தையும் சந்தனத்தினுல் எல்லேகடந்த அபராதத்தையும் பொறுக்கின்ருர்.

தைலாபிஷேகத்தினுல் சுகமும் பஞ்சகவ்யத்தினுல் பரிசுத்தமும், பஞ்சாமிருதத்தினுல் ஜயமும் க்ஷீரத்தினுல் ஆயுள் விருத்தியும் சந்தனுபிஷேகத்தினுல் மோக்ஷமும் உண்டாகும்.

அபிஷேகம் முடிந்தவுடன் திருஒத்தாடை; நிவேதனமாக சுத்தான்னம் நிவேதனம் செய்யவேண்டும்.

வெண்மையான வஸ்திரத்தினுல் நன்ருகத் துடைத்து வஸ்திரம் சாத்தவேண்டும். இலிங்கத்தை நான்கு பாகமாகக் கணக்கிட்டு அடியில் உள்ள ஒரு பாகத்தை வஸ்திரத்தினுல் மூ வேண்டும். நடுவிலுள் இரண்டுபாகங்களை ஆபரணங்களால் அலங்கரிக்கவேண்டும், மேலுள்ள ஒருபாகத்தை புஷ்பத்தினுல் அலங்கரிக்கவேண்டும். குங்குமப்பூ, பச்சைக்கற்பூரம், கஸ்தூரி, சந்தனம், கோரோசனை, புனுகு இவைகளைப் பன்னீர் விட்டு அரைத்து இலிங்கத்திற்கு லேபனம் செய்யவேண்டும்.

— சுப்ரபேதம்.

புஷ்ப விசேஷங்களில் வாசனையற்றதும் உக்ரமான வாசனையுடைய புஷ்பங்களும் கூடாது. பூச்சி, புழு, சிலந்தி நூல் உடைய புஷ்பம் பத்திரம் இவை கூடாது.

அக்ஷதையால் விஷ்ணுவையும், துளசியால் விநாயகரையும். அறுகால் தேவியையும், தாழம்பூவால் சிவபெருமானையும் பூஜிக்கக்கூடாது.

தாஞக விழுந்த புஷ்பங்களும், பழைய புஷ்பங்களும் கூடாது.

புஷ்பங்களையும் பத்திரங்களையும் கவிழ்த்துச் சாத்தக் கூடாது. ஆனுல் புஷ்பாஞ்சலியில் இந்த தோஷம் கிடையாது

ஸ்னனம் செய்துவிட்டு ஈர வஸ்திரத்துடன் எடுத்து வந்த புஷ்பமும் கொட்டை இலையில் எடுத்துவந்த புஷ்பமும் கையில் எடுத்துவந்த புஷ்பமும் பூஜைக்கு அர்ஹமில்லை.

உத்ஸவங்களிலும் யாத்திரையிலும், வீதிவலங்களிலும் சகளமூர்த்திகளின் அலங்காரங்களிலும் வர்ஜ்யமான புஷ்பங்களும் உபயோகிக்கலாம். — காரணம்.

पत्रं पुष्पं फलं तोयं अन्नपानाद्य मौषधम् ।
अनिवेद्य न भुंञ्जीत भगवन्तं सदाशिवम् ॥
यदपूपादिकं द्रव्यं भोज्यं दद्याच्छिवाययः ।
वर्धते तस्य तद्धान्यं फलपुष्पादिकं तथा ॥
अदत्वातु हरायाऽथ भुक्तस्य क्षीयते धनम् ।

— காமிகம்.

பத்ரம், புஷ்பம், பழம், ஜலம், அன்னம், பானீயம், மருந்து யாவையும் இறைவனுக்கு அர்ப்பணம் செய்யாமல் உட்கொள்ளக் கூடாது.

எவன்அபூபம் முதலான யாவற்றையும் ஈச்வரார்ப்பணம் செய்கிறனே அவனுக்கு அந்த தான்யம், பழம் முதலியன விருத்தியடையும், அவ்வாறு செய்யாவிடில் அது க்ஷீண மடையும்.

— காமிகாகமம்.

ஸ்னானம் செய்து வெண்மை ஆடை பூண்டு வெண்மையான யக்ஞோபவீதத்துடன் விளங்கும், பரிசாரகர் இறைவனுக்கு நிவேதனம் பக்வம் செய்யவேண்டும்.

— காமிகம்.

வஸ்திரபூதமான ஜலத்தினல் சருபாகம் செய்யவேண்டும். கேசம். கல், மணல் முதலானது அரிசியில் இருக்கக்கூடாது. அபக்குவமான அன்னத்தை இறைவனுக்கு நிவேதனம் செய்யக்கூடாது. நிவேதனத்தில் உமி இருந்தால் தரித்ரம் உண்டாகும், கல் இருந்தால் பிணி உண்டாகும், கேசம் இருந்தால் மரணம் சம்பவிக்கும்.

— காமிகாகமம்.

சுத்தமான தனித்தனி பாத்திரத்தில் அன்னம் முதலியவைகளை வைத்து அதன்மேல் ஒரு பத்திரத்தைப் போட்டு ஹ்ருதய மந்திரத்தினல் புரோக்ஷித்து தாளத்ரயம் திக்பந்தனம் அவ குண்டனம் தேனு முத்ரை காட்டி முறைப்படி நிவேதனம் செய்யவேண்டும். பக்ஷ்யம் போஜ்யம், பேயம், லேஹ்யம், சோஷ்யம் என்ற ஐவகை பதார்த்தங்களையும் பரிஷேசனம் செய்து ஹ்ருதய மந்திரத்தினல் அந்த போஜன சாதனத்தை

நடுவிரல் அணிவிரல்களைப் பெருவிரலுடன் சேர்த்து ஆசாரியன் கையைத் தூக்கி கௌரியின் கையில் அளித்து கௌரியின் கை மூலமாகச் சிவனுடைய ஹஸ்தத்தில் சமர்ப்பித்து நிவேதனம் செய்யவேண்டும். யானையினால் உட்கொள்ளப்பட்ட விளாங்கனிபோல சாரத்தை இறைவன் கொள்ளுகிறார்.

— காரணம்.

ரஸ பூர்ணமான தேங்காயை த்ரயம்பம் என்ற மந்திரம் கூறி ஒரே தடவையில் இரண்டு துண்டாகும்படி சமமாக உடைத்துக் குடுமி நீக்கி நிவேதனம் செய்யவேண்டும். வாசனையுள்ள பாக்குடன் கூடிய தாம்பூலம் பழம் முதலியன நிவேதனம் செய்து தீப ஆராதனை செய்யவேண்டும்.

— சந்தானகமம்.

ईश्वरस्यनिवेद्याथ तद्द्रव्यंप्रयतो नरः ।
तद्द्रव्यमष्टांशकंकृत्वा त्वाचार्यायप्रदापयेत ॥

तत्रैव

नित्यैनैमित्तिके चैव काम्ये चैव निवेद्यके ।
तण्डुलानि चतुर्भागं सोपदंशोपदंशकम् ॥
देशिकाय प्रदातव्यं श्रद्धा भक्तिसमन्वितः ।
अदद्याद्यजमानश्चेत् तत्सर्वं निष्फलं भवेत् ॥

நித்யம் நைமித்திகம் காம்யம் முதலிய காலங்களில் இறைவனுக்குச் செய்யப்படும் நைவேத்யம் பக்ஷ்யம் உபதம்சம் முதலியவைகளில் நான்கில் ஒருபாகம் ஆசாரியனின் பொருட்டுக் கொடுக்கவேண்டும். அவ்வாறு யஜமான கொடுக்காவிடில் அக் கர்மா நிஷ்பலமடையும்.

— அம்சுமானகமம்.

आचार्यमनसस्तुष्टिर्देवसन्तोषकारणम् ।

ஆசாரியனுடைய மனத்திருப்தியே தேவசந்தோஷத்திற்குக் காரணம்.

— காரணகமம்.

(தொடரும்)

# வீரசோழியம்

டாக்டர் செ. வை. சண்முகம் M. A., M. Litt, Phd.

(மலர் 29, இதழ் 6, பக்கம் 332 இன் தொடர்ச்சி)

## 4. 3. 6 கால இடை நிலை :

த, ன, ய என்ற மூன்று இடைநிலைகளை இறந்த காலத்திற்குக் கூறியுள்ளார் (நுற்பா 56) னகர வொற்றும் யகர வொற்றும் பெயரெச்ச விகுதிக்கு முன்னும், செய்தால் வாய்பாட்டிலும் வரும். சங்க இலக்கியத்தில் அவ்விரு விகுதிக்கு முன்னர் யகர மெய்யே பெரும்பாலும் வந்துள்ளது

நிகழ் காலத்திற்கு உரிய இடைநிலை மிகக் குறைவான இடங்களில் பிற்கால சங்கஇலக்கியத்தில் சேர்கின்ற. (பரிபாடல் 22-35) ஓசனிக்கின்ற (சிலம்பு 14-25) சாதிக்கிற (29-299 மணிமேகலை) முதலியன பயன்படுத்தப்பட்டுள்ளன. ஆனல், இடைக்காலத்தில் மிகப் பெருகிய வழக்காகி விட்டது. எனவே வீரசோழியம் கிறு ஆநின்று என்ற இடைநிலைகள் 66-ஆம் நூற்பாவில் குறிப்பிடுகிறது. பின்னல் வினை விகுதியைக் கூறும்போது கின்று, கிறு என்ற இரு விகுதிகள் (74 ஆம் நூற்பா) காணப்படுகின்றன. எனவே அவற்றை மாற்று வடிவமாகக் (allomosph) கருத வேண்டும். கின்று என்ற விகுதி பலர்பால், ஒன்றன்பால், பலவின்பால் ஆகிய மூன்று பாலுக்கு முன்னரும் கிறு ஏனைய இடத்திலும் பயன்படுத்தியுள்ளார், வீரசோழிய ஆசிரியர். தற்காலத் தமிழில் கின்று பலவின்பால் விகுதிக்கு முன்னர் மட்டும் வருகிறது. ஏனைய இடங்களில் கிறு பெரும்பான்மையும் கின்று சிறுபான்மையும் பயனபடுத்தப்படுகின்றன.

## 4. 3. 8. வினையெச்சம் :

தொல்காப்பியத்தில் கூறப்படாத இரண்டு புதுவினையெச்ச வாய்ப்பாடுகளை வீரசோழியம் குறிப்பிடுகிறது. வான், பான் என்ற இரண்டையும் வினையெச்ச விகுதிகளாக 67 ஆம் நூற்பாவில் கூறியுள்ளார். கலித்தொகையிலும் பரிபாடலிலும் இவ்வினையெச்சம் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பது அறியத்தக்கது.

| | |
|---|---|
| காண்பான் | கலி 97-7 |
| கொள்வான் | பரி 16-59 |

### 4. 3. 9. வினை விகுதிகள் :

ஏவல் பன்மைக்குரியதாக உரையாசிரியர் மின்கள், உம். கள் என்ற மூன்று விகுதிகளையும் நீங்கள் போமின்கள், நீங்கள் நில்லும். நீங்கள் நில்லுங்கள் என்ற பயிற்சியையும் காட்டியுள்ளாரே தவிர கள் விகுதியைத் தனியாகத் தரவில்லை. எனவே கள்ளை ஏவல் பன்மை விகுதியாகக் கருதுதல் பொருத்தமாகத் தெரியவில்லை.

... ... ... ... ... ... பன்மையாமிடத்து
நீங்காத மின்களுங்கள்ளாம் ... ... ... ...

என்பதுதான் வீரசோழிய நூற்பா (79). இதை மின்கள், உங்கள் என்று இரண்டு விகுதியைக் குறிப்பதாகக் கொள்வதே பொருத்தமாக அமையும்.

தொல்காப்பியத்தில் மின் என்ற விகுதி மட்டுமே கூறப்பட்டுள்ளது. சங்க இலக்கியத்தில் உம் விகுதி முன்னிலைப் பன்மையாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. சான்றாக,

| | | |
|---|---|---|
| தொண்டு | — | புறம் 152 |
| வாரும் | — | பரிபாடல் 14. 9 |

ஆகியவற்றைக் கூறலாம். அப்பர் தேவாரத்தில் மின்கள் என்ற விகுதி பயின்று வந்துள்ளது

| | |
|---|---|
| காண்மின்கள், | திரு அங்கமாலை 2 |
| கேண்மின்கள் | ,, 3 |

மூவிடத்திற்குரிய விகுதியைப் பேசும்போது துணிவின்கண் வரும் விகுதியென்றும் பொதுவான விகுதியென்றும் இரண்டு வித விகுதிகளைப்பற்றி வீரசோழியம் பேசுகின்றது. துணிவுப் பொருளில் வரும் விகுதிகள் பெரும்பான்மையும் எதிர்கால விகுதிகளை உடையதாக இருப்பினும் சில புதிய விகுதிகளையும் உடையதாக உள்ளன. இரண்டிலும் பால்காட்டும் விகுதிகள் கீழே தரப்பட்டுள்ளன,

| | | துணிவுப் பொருளில் வரும் பால் காட்டும் விகுதி | பொதுவான பால் காட்டும் விகுதி |
|---|---|---|---|
| தன்மை | ஒருமை | அன் | ஏன் |
| ,, | சிறப்பு ஒருமை | | ஏம் |
| ,, | பன்மை | அம் ஓம் | ஓம் |
| முன்னிலை | ஒருமை | சி, தி, வை | ஆய் |
| | சிறப்பு ஒருமை | | ஈர் |
| | பன்மை | இர் | ஈர்கள் |
| படர்க்கை | ஆண்பால் | | ஆண் |
| | பெண் | உம்/ம் | ஆள் |
| | சிறப்பு ஒருமை | | ஆர் |
| | பலர்பால் | அர். அர்கள் | ஆர்கள் |
| | ஒன்றன்பால் | | அது |
| | பலவின்பால் | | அன |

தன்மை ஒருமையில் அன் விகுதியும் பன்மையில் ஓம் விகுதியும் தொல்காப்பியர் காலத்திற்குப் பிறகு மொழியில் ஏற்பட்ட மாற்றத்தால் உண்டானவை. அன் விகுதி சங்க இலக்கியத்தில் நிறைய வந்துள்ளன.[5]

| | |
|---|---|
| கைவிடு கலன் | அகம் - 193 |
| அளியன் | குறுந் - 30 |
| உரைத்தனன் | புறம் - 136 |
| கூறுவன் | நற் - 233 முதலியன |

ஓம் விகுதி சிலம்பிலும் மணிமேகலையிலும் காணப்படுகின்றது.

| | |
|---|---|
| ஆடினேம் | சிலம்பு 24. 7. 2 |
| இலோம் | மணிமேகலை 5. 56 |

## 5. இடைக்கால மொழி அமைப்பு :

வீரசோழிய ஆசிரியர் இடைக்காலத் தமிழின் அமைப்பை முழுவதும் விளக்கிவிட்டார் என்று கூறமுடியாது. பிற்கால

---

[5] க. வெள்ளைவாரணன் 'தமிழ் இலக்கிய வரலாறு-தொல்காப்பியம்' பக்கம் 89 – 90 (அண்ணாமலைநகர். 1959.

இலக்கணங்கள் பல, தம் காலமொழி நிலையைக் காட்டும் நூலாக அமையாமல் சில இலக்கண நூல்களை ஒட்டி எழுந்த இலக்கண நூலாகவும் சில குறிப்பிட்ட கருத்தை விளக்கும் நூலாகவும் உள்ளன.

## 5. 1, எழுத்ததிகாரம் :

ஞகரமெய் இகரத்தோடு கூடி மொழிக்கு முதலில் பழந்தமிழ் இலக்கியத்திலும் இடைக்கால இலக்கியத்திலும் வந்துள்ளது. அவ்வுண்மை வீரசோழியத்திலும் பிற இடைக்கால இலக்கண நூல்களிலும் கூறப்படவில்லை.

ஞிமிறு புறம் 93 - 12. அகம் 599
பதிற்றுப்பத்து 12 - 12. சிலம்பு 252 - 50
சீவகசிந்தாமணி 48 - 3

ஞிணம் புறம் 177 - 14.

(தொடரும்)

---

## EXTRACT FROM THE VISITORS' BOOK

Dharmapuram Adhinam

Sri Sattanathaswami Devasthanam, Sirkazhi

"I am happy to visit this temple today and I was taken round the temple by Thiru. Sourirajan, Superintendent. The maintenance and cleanliness of the temple inspire a special attraction to the deity."

(Sd.) S. Kuppuswami,
District Employment Officer,
Thanjavur.

26—5—70.

# அக்னி

வேதாந்த சிரோமணி,

**பிரமஸ்ரீ. K. இராஜகோபால சாஸ்திரிகள்**

திக்பாலகர்கள் (அல்லது திக்பதிகள்) எட்டு என்று கொண்டது பிற்காலத்தில்தான். வேதத்தில் இந்திரன் அக்னி, வருணன் இம் மூவரும் அதிகமாக மிகப் பெரிய தெய்வங்களாகக் கூறப்பட்டிருப்பினும் திக்குகளுக்கு அதி தேவதையாகச் சொல்லப்படவில்லை. திக்குகளும விதிக்குகளும் மட்டும் கூறப்பட்டிருக்கின்றன.

திக்பாலகர் என்பதற்கு முன் லோகபாலர் (உலகை நாற்புறமிருந்து காப்பவர்) என்ற சொல்லே மிகுதியாகக் கையாளப் பட்டிருக்கிறது. அதிலும் நான்கு லோக பாலர்களே தென்படுகின்றனர். ஆச்வலாயன கிருஹ்ய சூத்திரத்தில் (1-1-2) பலிஹரணத்தில் இந்திரன் யமன் வருணன் ஸோமன் என்ற நான்கு திக்பதிகளையே காண்கிறோம்.

வைதிககர்மாக்களில் ஸோமன் குபேரனுக்குப் பதிலாக திக்பாலகராகக் கூறப்படுகிறான். சில இடங்களில் ஈசானனுக்குப் பதிலாகவும் கூறப்படுகிறான். ஸோமன் என்றால் சிவன் என்றும் பொருள் உண்டு. திக்பாலகராகச் சொல்லப்படும் ஸோமன் சந்திரன்தான் என்பது சில்பரத்னம் முதலிய நூல்களில் லக்ஷணம் கூறும் வகையில் உணரப்படுகிறது. மனுஸ்மிருதியில் 5-96, 7-4. ஆகிய இரண்டு இடங்களில் திக்பாலகர்களைக் குறிக்கும்போது ஸோமன என்றும், சந்திரன் என்றும் ஈசானருக்குப் பதிலாகத் தரப்பட்டிருக்கிறது.

காளிதாசனுடைய காவ்யங்களிலும் "செல்வம் படைத்த நான்கு திக்பதிகளையும் பொருட்படுத்தாமல் சிவனைக் கணவனாக அடைய பார்வதி விரும்புகிறாள்" என்றும் "தசரதன்" யமன், குபேரன், இந்திரன் வருணன் இவர்களுக்கு நிகரான பாரத்தைத் தாங்குகிறான்" என்றும் அதிதி என்ற மகாராஜாவை வர்ணிக்கும்போது "இவன் ஐந்தாவது லோகபாலன்"

என்றும் இப்படிப் பல இடங்களில் நான்கு திக்பதிகளே கூறப் படுகின்றனர். இராமாயணம் அயோத்யாகாண்டம் நாராஜக சர்க்கத்தில் அரசன் தன் சீரிய நடத்தையால் யமன் குபேரன், இந்திரன், வருணன் இவர்களை அதிகரிக்கிறன் என்று நான்கு திக்பாலர்களே கூறப்படுகின்றனர்.

ஆனால் பிற்கால நூல்களில் திக்பாலகர்கள் எட்டு, அவர் களுடைய அம்சத்தால் அரசன் பிறக்கிறன் என்ற கொள்கை மிகவும் விரிவாகக் கூறப்படுகிறது. மனுஸ்மிருதியிலேயே 5-96, 7-4 இவ்விரண்டு இடங்களிலும் எட்டு திக்பாலகர்களுடைய தொடர்பு அரசனுக்கு எவ்வகையில் பொருந்துகிறது என்று விரித்துரைக்கப்படுகிறது. எட்டு திக்பதிகளில் குபேரன், ஈசானன் இவ்விருவர்களில் ஒருவருக்குப் பதிலாக ஸோமன் கூறப்படுகிறன். தென்கிழக்கு திக்கிற்கு அதிபதி அக்னி, தேவாலயங்களிலும் வீடுகளிலும் அக்னியைக்கொண்டு செய்யப் படும் சமையலுக்கு இடமான பாகசாலையை (சமையல் செய்யும் இடத்தை) தென்கிழக்கு மூலையில் அமைத்ததும் இதுபற்றியேயா கும். விசுவாநரன் என்பவன் தவமியற்றி கிருஹபதிஎன்ற அக்னி யை மகனாகப்பெற்றான். நாரதமுனிவர் பன்னிரண்டாவதுவயதில் இவன் இடிவிழுந்து இறப்பான் என்று விசுவாநரனிடம் கூறி னர். அக்னியும் குழந்தைப் பருவத்திலேயே சிவபெருமானைக் குறித்துத் தவமியற்ற ஆரம்பித்தான். எந்த நாளில் இடி விழுந்து இவன் இறப்பான் என்று நாரதர் கூறினரோ அந்த நாளில் ஈசன் இந்திர உருவத்துடன் அக்னியின் முன்தோன்றி "யாது வரம் வேண்டும்" என்று வினவினர். அக்னி சிவனை யன்றிப் பிறரிடம் யான் யாதும் விரும்பவில்லை என்று கூறவே இந்திரன் வேடத்திலிருந்த சிவன் சினந்தவர்போல வஜ்ரத் தைத் தூக்கிக்காட்டினர், நடுங்கிய அக்னி சிவனைத் துதிக்கவே சிவபெருமான் தன்சுய ரூபத்துடன் காக்ஷியளித்து திக்பால பதவியையும் அவனுக்கு அருளினன் என்று காசிகாண்டம் பதி னைன்றும் அத்தியாயம் கூறும். காசியில் அக்னி ஸ்தாபித்த லிங்கத்தை வழிபட்டவர்களுக்கு இடியினல் பயமில்லை என்றும் கூறும். விசுவாநரனுடைய பிள்ளையாதலின் வைச்வாநரன்என்று அக்னிக்குப் பெயர்.

வேதத்தில்

"चत्वारि श्रृङ्गा त्रयो अस्य पादा द्वे शीर्षे सप्त हस्तासो अस्य"

என்று அக்னி வர்ணிக்கப்படுகிறார். (இவருக்கு நான்கு கொம்புகள், மூன்று பாதங்கள், இரண்டு தலைகள் ஏழு கைகள்) உத்தரகாரணம் 20 ஆம் படலத்தில்

मेषारूढं सप्तहस्तं ज्वालाकेशसमप्रभम् ।
सप्तजिह्वं चतुर्नेत्रं रक्तवस्त्राङ्गरागकम् ॥
घृतपात्रं तोमरं च व्यजनं शूलमेव च ।
शक्तिं खड्गं च खेटं च अग्निं ध्यायेद्विशेषतः ॥

ஏழுகை, ஏழுநாக்கு, நான்கு கண், சிவந்த ஆடை, பூச்சு, ஜ்வாலாகேசம் இவற்றையுடையவர் ஆட்டுவாஹனத்தில் ஏறியவர். நெய்ப்பாத்திரம், தோமரம், விசிறி, சூலம், சக்தி, கத்தி, கேடயம் இவற்றைத் தரித்தவராக அக்னியை தியானிக்கவேண்டும். அக்னி பகவானுக்கு ஏழு நாக்குகள் என்பது முண்டகோபநிஷத்தில் இரண்டாம் கண்டம் நான்காம் மந்திரத்தில் வருமாறு :-

काली कराली च मनोजवा च सुलोहिता या च सुधूम्रवर्णा ।
स्फुलिङ्गिनी विश्वरुची च देवी लेलायमाना इति सप्त जिह्वाः ॥

காளி, கராளி, மனோஜவா, ஸுலோஹிதா, தூம்ரவர்ணா, ஸ்புலிங்கினி, விச்வருசி என்று ஏழு நாக்குகளுக்கும் பெயர். ஆனால் ஆகமங்களில் ஹிரண்யா, கனகா, ரக்தா, கிருஷ்ணா சுப்ரபா, அதிரக்தா, பஹுரூபா என்ற பெயர்கள் கூறப்பட்டிருக்கின்றன. இந்த ஏழு நாக்குகளின் நிறம்; பீஜமந்திரம்; வச்யம், ஸ்தம்பனம, ஆகர்ஷணம் வித்வேஷணம், மாரணம் முதலிய கர்மாக்களுக்கு எந்த எந்த நாக்குகளில் எந்த எந்த திரவியங்களை எந்த வகையாக ஹோமம் செய்யவேண்டும் என்ற முறை; குண்டத்தில் இருக்கும் அக்னியில் இந்த நாக்குகள் இருக்குமிடம் முதலியன சோமசம்புபத்ததி (சமயதீக்ஷாவிதிபடலம் 50 to 63) முதலிய பத்ததிநூல்களில் விரிவாகக் காணலாம்.

பஞ்ச பூதங்களில் ஒருவனாகிய அக்னி சிவபெருமானுடைய அஷ்டமூர்த்திகளில் ஒருவனாகவும் இருக்கிறான். அக்னி சிவபெருமானுக்கு சரீரமாக மட்டும் கூறப்படவில்லை. வீர்யமாகவும் கண்ணாகவும் சொல்லப்பட்டிருக்கிறான்.

कृशानुरेताः सर्वज्ञो धूर्जटिर्नीललोहितः ।

என்ற நாமலிங்கானுசாஸனம் சிவபெருமானுடைய பெயர்களில் கிருசானு ரேதா : என்று கூறுவதும் கவனிக்கத்தக்கது.

अग्ने त्वमैश्वरं तेजः पावनं परमं यतः ।
तस्मात्त्वदीयहृत्पद्मे संस्थाप्य तर्पयाम्यहम् ॥

என்ற ஆகமவாக்கியமும் அக்னி சிவபெருமானின் வீர்யம் என்பதை உணர்த்தும். (கிருசானு - அக்னி) மேலும் அக்னிபகவான் தேவர்களுக்கு முகமாகவும் (வாயாக) கூறப்படுகிறான். ஆதலால் தான் வேள்விகளில் அக்னியில் போடப்படும் ஹவிசு தேவர்களின் வாயில் போடப்படுவதாகக் கருதப்படுகிறது.

குமாரசம்பவத்தில் தாரகாசுரனால் துன்பமடைந்த தேவர்கள் பிர்மதேவனிடம் சென்று தாங்கள் படும் கஷ்டத்தை எடுத்துச் சொல்லும்பொழுது. "வேள்விகளில் முறைப்படி யஜமானர்களால் போடப்பட்ட ஹவிசை நாங்கள் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே மாயாவியான தாரகன் அக்னியாகிய எங்களுடைய வாயிலிருந்து பிடுங்கிக்கொள்கிறான்" என்று காளிதாசன் கூறுவதும் கவனிக்கத்தக்கது. ஹவ்யத்தை (தேவர்களுக்குக் கொடுக்கப்படும் அவிப்பொருளை) தேவர்களுக்குச் சேர்ப்பதாலேயே அக்னிக்கு ஹவ்யவாஹன் என்ற பெயர். ஹவ்யத்தை (பிதிர்களுக்குக் கொடுக்கப்படும் பொருளை) சுமந்து சென்று பிதிர்க்களிடம் சேர்ப்பதால் கவ்யவாஹன் என்ற பெயரும் உண்டு.

அக்னிக்கு ஸ்வாஹா, ஸ்வதா என்ற இரண்டு மனைவிகள் உண்டு. ஒருசமயம் தேவர்கள் உணவை வேண்டி விஷ்ணுவை வேண்டினர். திருமால் தன்னுடைய ஒரு அம்சத்தால் வேள்வியாகத் தோன்றினார். அந்த வேள்வியில் அக்னிபகவானிடம் போடப்பட்ட ஹவிசு தேவர்களை அடையவில்லை- திருமாலின் கட்டளைப்படி தேவர்கள் மூலப்பிரகிருதியை வேண்டினர். மூல பிரகிருதியின் அம்சத்தால் ஸ்வாஹாதேவி தோன்றினாள். அவளை அக்னிபகவான் மணந்து தேவர்களுக்கு ஹவிசைக் கொண்டு செல்லக்கூடிய சக்தியையும் பெற்றார். அதனால் தேவர்களுக்கு ஹவிசு கொடுக்கும்பொழுது ஸ்வாஹா என்று சொல்லியே கொடுக்கவேண்டும் என்று (தேவிபாகவதம் ஸ்கந்த-9 அத்தியாயம் - 43) கூறுகிறது. (தொடரும்).

# EXTRACT FROM THE VISITORS' BOOK

## Dharmapuram Adhinam

## Sri Sattanathaswamy Devasthanam, Sirkazhi.

சீர்காழி திருத்தலத்திற்கு இன்று வந்து தரிசிக்கும் பேறு கிடைத்தது. சட்டைநாதப் பெருமானையும், பாலருவாயரையும் தரிசிப்பது பெரும்பேறு.

சிறந்த இத்தலத்தை மிக சுத்தமாகவும்-சிறப்பாகவும் போற்றிவரும் தருமபுர சந்நிதானத்தின் சிறப்பு போற்றுதற்குரியது.

கோவில் சிற்பங்களின் படங்களும், கோயிலின் படமும் அச்சிட்டு விலைக்கு எல்லா இடங்களிலும் கிடைக்க ஏற்பாடு செய்வது நலம்.

நா. மகாலிங்கம்,

20—5—'70.

## Sri Sivaloga Tyagarajaswami Devasthanam, Achalpuram.

திரு ஆச்சாள்புரத்தில் திருஞானசம்பந்தரின் திருமணமாகிற பெருமணதினமாகிய இன்றைய புண்யதினத்தில் அடியேனும் என் மனைவியுடன் அவ் வைபவத்தில் கலந்துகொள்ளும் பாக்யம் திருவருள் கூட்டிவைத்தது. தருமபுர ஆதீன மகா சந்நிதானத்தின் ஆக்ஞை பேரில் இந்த கோவிலில் இந் நன்னாளில் இரவு தேவாரக் குழந்தைகளுக்குப் பரிசளிக்க ஒரு வாய்ப்பும், திருஞானசம்பந்தர் வாழ்க்கையைச் சித்தரிக்கும் சங்கீத உபன்யாசமும் செய்யும் பாக்கியமும் கிடைத்தது. கோவிலில் உள்ள மூர்த்திகளின் அலங்காரம் கோவிலில் பணியாற்றுபவர்களின் உளங்கனிந்த அன்பும் சிவசமயம் எவ்வாறு இங்கு ஊன்றியிருக்கிறது என்பதற்கு எடுத்துக்காட்டு. தேவஸ்தானத்தை நிர்வகிக்கும் மகாசந்நிதானத்தின் ஆற்றலுக்கும் திறமைக்கும் எல்லாவற்றிற்கும் மேலாக இக் கோவிலின்பால் அவர்களுக்குள்ள எல்லையற்ற பக்தியையும் வியக்காமலிருக்கமுடியாது. உலகமெலாம் சாந்திநிலவ நம்நாடு சமயப்பற்றிலும், சிவப்பற்றிலும் (சிவம் என்றால் அன்பு) என்றும் நிலைத்து அன்பு வழியை உலகத்திற்கு எடுத்துக்காட்ட இங்கு எழுந்தருளியிருக்கும், மூர்த்திகளும், சந்நிதானமும் அருள்வழங்கப் பிரார்த்திக்கிறோம்.

(Sd.) A. Visvanathan, B. A., B. L,
Additional I Class Magistrate,
Mayuram.

22—5—70.

(Sd.) Mrs. Muthulakshmi Visvanathan,
Secretary Sri Meenakshi Mather
Bajanai Sangham, Mathurai-1.

திருவாமூரில்

# ஸ்ரீ அப்பர் சுவாமிகள் குருபூசை விழா

## சென்னையில் கார் ஊர்வலம் :

தமிழகத்தில் இருண்டகாலத்தின் கி. பி. ஆறும் நூற்றாண்டு இறுதியில் விடிவெள்ளியாகத் தோன்றியவர்கள் ஞானசம்பந்தரும், நாவுக்கரசருமாவர். கடவுட் கொள்கையைப்பற்றி ஏற்பட்டிருந்த குழப்ப நிலையைத் தெளியச் செய்தவர்கள் இவ்விரு பெருமக்களுமேயாவர். தமிழ் மொழியையும், தமிழ்ப் பண்பையும், தமிழ் மக்களின் சிவ நெறியையும் நேர்மை குன்றாமல் வளர்த்த பெருமை இவ்விருவரையுமே சாரும்.

இவ்விருவரில் ஞானசம்பந்தர் கி. பி. ஏழாம் நூற்றாண்டில் தமிழகத்தின் தென் பகுதியாகிய பாண்டிய நாட்டில் மண்டிக் கிடந்த அறியாமை என்னும் இருளை அகற்றி, அறிவுடைமை என்னும் ஒளியைப் பெருக்கி மங்கையர்க்கரசியாரைத் துணையாகக் கொண்டு, சிவநெறியை வளர்த்தவர். தமிழகத்தின் வடக்குப் பகுதியில் பல்லவர் ஆட்சிப் பிடிப்பில் பண்பு மாறிக் கிடந்த தமிழகத்திற்குத் தமக்கை திலகவதியாரின் துணைக் கொண்டு சைவ நெறியை வளமுறுத்தியவர் அப்பர் எனப் போற்றப்பெறும் திருநாவுக்கரசராவார். இவர் அவதரித்த திருவாமூரில் ஏழாண்டுகளுக்கு முன்னர் ஆதீனங்கள், அறநிலையத்துறை, ஊர்ப்பொதுமக்கள் ஆகியோரின் உதவியாலும் ஒத்துழைப்பாலும் அப்பர் பெருமானுக்குக் கோயில் எடுக்கப் பெற்று நாள்வழிபாடு. சிறப்புவழிபாடு முதலியன நடைபெற்று வருகின்றன. அது முதல் ஆண்டு தோறும் சித்திரைச் சதய நன்னாளில் அப்பர் பெருமானின் குருபூசை விழா, குருபூசை விழாக் கழகத்தினரால் திருத்தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்களின் அருளாசியோடு சிறப்பாக நடைபெற்றுவருகிறது.

நிகழாண்டில் 30—4—'70 வியாழக்கிழமை திருவாமூர் அப்பர் ஆலயத்தில் குருபூசை விழா பல்லாயிரக்கணக்கான பக்தர்கள் வழிபடச் சிறப்பாக நடந்தேறியது. அதையொட்டி 27—4—'70 அன்று அப்பர் பெருமான் 81 ஆண்டுகள் இந்நிலவுலகில் வாழ்ந்து மக்களுக்கு அறநெறி புகட்டிய முறையைச் சிறப்பிக்க 81 கார்கள் சென்னை, தருமையாதீன சமயப் பிரசார நிலையத்திலிருந்து தவத்திரு சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் தலைமையில்புறப்பட்டுமுக்கியவீதிகளில் ஊர்வலமாகத் திருவல்லிக்கேணி

மாடவீதி, மைலாப்பூர் மாடவீதிகளின் வழியாக நிலையத்தை அடைந்தது. உயர்நீதிமன்ற நடுவர்களான திரு. என். கிருஷ்ணசாமி ரெட்டியார், திரு. என். மகராஜன், அறநிலைய ஆணையர் திரு. நரசிம்மன் மற்றும் பல பெருமக்கள் ஊர்வலத்தில் பங்குகொண்டனர்.

வாழ்த்துக் கூட்டம் :

ஊர்வல நிறைவில் வாழ்த்துக் கூட்டம் சென்னை சமயப் பிரசார நிலையத்தில் சிறப்புற மாலை 7 மணிக்குத் தொடங்கியது. உயர்நீதிமன்ற நடுவர் திரு. என். மகராஜன் தலைமையேற்றார். திரு. சிவப்பிரகாசம், திரு. ஞானப்பிரகாசம், திரு. சுவாமிநாதன் ஆகியோர் கடவுள் வாழ்த்துப் பாடினர்.

தொடக்கவுரை :

தமிழ்நாடு சட்டப் பேரவைத் தலைவர் புலவர். திரு. கா. கோவிந்தன் அவர்கள் விழாவைத் தொடங்கிவைத்து, அப்பர் தேவாரத்தைப் பல முனை நின்று ஆராய்ந்து அறிஞர் பலர் படித்த 25 சிறப்புக் கட்டுரைகளும், 25 வாழ்த்துச் செய்திகளும் பொதுள உருவாக்கப்பெற்ற அப்பர் சுவாமிகள் குருபூசை விழா மலரை வெளியிட்டுப் பேசுகையில் "திராவிட முன்னேற்றக் கழகம் சமயத்திற்கு விரோதமானதல்ல; நாங்கள் என்றுமே மக்கள் விருப்பத்துக்கு மாறுகச் செல்லமாட்டோம். எங்களுக்குச் சமயம் பற்றிய கருத்து வேறுபாடுகளிருப்பினும் மக்கள் உணர்வுகளை மதித்தே நடப்போம். அந்த அடிப்படையில்தான் நான் இங்கே இவ் விழாவில் பங்கேற்கிறேன். தேவார திருவாசகத்தில் எனக்கு ஈடுபாடு உண்டு; அரசியல் துறையில் ஈடுபட்டமையின் அவற்றையெல்லாம் ஊன்றிப் படித்தறிய இயலாது போயிற்று; இருப்பினும் அப்பர் சுவாமிகள் பாடல்களை ஓரளவு அறிவேன்; அதில், 'ஆரியன் கண்டாய், தமிழன் கண்டாய்', 'ஆரியம் தமிழோடிசையானவன்' என்றதொடர்களால் வடமொழியையும், தென்தமிழையும் ஒப்பநோக்கி உயர்வு கண்டவர் அப்பர் என்பதை எண்ணி மகிழ்கிறேன்" என்று குறிப்பிட்டார்கள்.

தலைமையுரை :

விழாத் தலைவர் திரு. என். மகராஜன் அவர்கள் தலைமையுரையில் "சைவம் எல்லாச் சமயத்தையும் தழுவி நிற்பது என சைவ சமய வல்லுநர் குறிப்பிடுவர்; அதனை அப்பரடிகள்

"இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவன் இறைவன் என்று எழுதிக் காட்டொணாதே' என்ற தொடரால் எளியவருக்கும் சைவ சமய திட்ப நுட்பத்தை விளக்கியிருக்கின்றார்'' என்று குறிப்பிட்ட பல பாடல்களை மேற்கோள்களுடன் விளக்கிப் பேசினார்கள்.

சிறப்புரைகள் :

சிறப்புரையாற்றிய டாக்டர் திரு. மு. வரதராசனார் அவர்கள் "அப்பர் உண்மையான சமயத்தைப் போற்றி வளர்த்தவர்; போலிச் சமயவாதிகளைச் சாடியவர்; 'பொக்கம் மிக்கவர் பூவும் நீரும் கண்டு நக்கு நிற்பன் அவர் தம்மை நாணியே' என்பன போன்ற பல பாடல்களை அவருடைய தேவாரத்தில் அதிகம் காணலாம். எல்லாச் சமயங்களிலும் சடங்குகள் உண்டு. சடங்குகளெல்லாம் நற்கருத்துக்களை உள்ளடக்கியனவாகவே அமைந்துள்ளன. நாளடைவில் மக்கள் சடங்குகளையே பெரிதெனக் கொண்டு, அதிலுள்ள தத்துவக் கருத்துக்களை கைநழுவவிட்டு விடுகின்றனர். அந்நிலை சாரத்தை விடுத்துசக்கையைக்கொள்வதற்கு ஒப்பாகுமென்று'' குறிப்பிட்டார்கள்.

திருமதி. சௌந்தரா கைலாசம் அவர்கள் சிறப்புரையாற்றுகையில், "சென்ற ஆண்டில் பாத யாத்திரை. இவ்வாண்டில் கார் ஊர்வலம் என திருவாரூர் அப்பர் குருபூசை விழாப் பற்றிய கிளர்ச்சியை மக்களுக்கு ஊட்டி தவத்திரு. தம்பிரான் சுவாமிகளும், குருபூசை விழாக் கழகத்தினரும் விழாவைப் பொலியவைத்தனர். இத்தகு கிளர்ச்சிகள் சமய எழுச்சிக்கு உறுதுணை புரியவல்லன. அப்பர் சுவாமிகள் இன்று நினைக்கப்படும் புரட்சிக் கருத்துக்களை எல்லாம் 1300 ஆண்டுகளுக்கு முன்னரே பக்திப்பாடல்களின்வழியே பரவச்செய்தவர்'' என்று குறிப்பிட்டார்கள்.

தவத்திரு. சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் வரவேற்புரையில் அப்பருக்கு விழா எடுப்பதன் இன்றியமையாமையை வலியுறுத்தி வாழ்த்துச் செய்திகளைப் படித்தார்கள். திரு. ஔவை. நடராசன் அவர்கள் நன்றி கூறினார்கள். வாழ்த்தொடு விழா நிறைவெய்தியது.

கவின்மிகு ஊர்வலம் :

28—4—'70 காலை 6 மணியளவில் சென்னை சமயப்பிரசார நிலையத்திலிருந்து ஸ்ரீ அப்பர் சுவாமிகளின் திருவுருவப் படத்

துடன் கார்கள் ஊர்வலமாகப் புறப்பட்டுத் தாம்பரம், செங்கற்பட்டு, மதுராந்தகம், தொழுப்பேடு, திண்டிவனம், விக்கிரவாண்டி, கண்டரக்கோட்டை, பண்ணுருட்டி, திருவதிகை, சேமக்கோட்டை வழியாகப் பகல் ஒருமணியளவில் திருவாமூர் சென்றடைந்தது. மேற்குறிப்பிட்ட ஊர்களில் நவீன் ஸ்டுடியோ ஏகாம்பரம், பேராசிரியர் ஆலாலசுந்தரம் செட்டியார், அம்பில் ஸ்டோர்ஸ் மணி அய்யர், பூசை நமசிவாய முதலியார், கயப்பாக்கம் முத்துலிங்கா ரெட்டியார், ஏரிகாத்தராமர் ஆலய அறங்காவலர்கள், கன்னுரெட்டியார், ஆர். வேங்கடசுப்பாரெட்டியார், ராமபத்திர ரெட்டியார், நாராயண ரெட்டியார், சுப்பராயலு எம். ஏ., இராமலிங்கம் செட்டியார், என். சுப்பிரமணிய செட்டியார், கே. எம. இராமசாமி செட்டியார், சண்முகசுந்தர தேசிகர், குருசாமி ரெட்டியார், பட்டாபிராம ரெட்டியார் மற்றும் பலரும் சென்னையிலிருந்து திருவாமூர் வரையில் ஆங்காங்கும் தோரணம் நாட்டிப் பூரண கும்பத்துடன் வழி நெடுக வரவேற்பு வளைவுகள் அமைத்துச் சிறப்பித்தார்கள்.

பாதயாத்திரைப் பாங்கு :

24—4—70 இல் தில்லைத் திருமுறைக் கழகத்தினர், மற்றும் பல கழகங்களுடன் இணைந்து 37 சிவபூசகர்கள் உழவாரப் படையுடனும், தில்லை ஸ்ரீ நடராஜர் சந்நிதியில் ஏற்றிய ஒளிவளர் விளக்குடனும் தில்லைச்சிதம்பரத்திலிருந்து புவனகிரி, உடையூர், மின்னலூர், காடாம்புலியூர், பண்ணுருட்டி, எலந்தம்பட்டு வழியாக 28—4—70 காலை திருவாமூரை வந்தடைந்தனர். மாதினியார் சிவபூஜை நிலையத்தில் சிவபூஜை புரிந்து ஆடூர் சு. கணபதியா பிள்ளை அவர்கள் தலைமையில், சிவபூஜை தத்துவ விளக்க மாநாடும். பன்னிரு திருமுறைப் பாராயணமும் சிறப்புற மூன்று நாட்களும் நிகழ்த்தினர்கள்.

அப்பர் தேவார அருந்தமிழ் மாநாடு :

23—4—70 மாலை 6 மணியளவில் அப்பர் தேவார அருந்தமிழ் மாநாடு தொடங்கப்பெற்றது. புதுவை மாநில ஆளுநர் மேதகு. பி. டி. ஜெட்டி அவர்கள் விழாவைத் தொடங்கிவைத்துப் பேசுகையில் "கல்வி வளர்ச்சியில் ஆரம்பப்பள்ளி, உயர்நிலைப் பள்ளி, கல்லூரி என்று பல நிலைகள் இருப்பதுபோல் சமயத்துறையில் பல்வேறு சமயங்கள் அவரவர் தகுதிக்கேற்றவகையில் பலவாக இருப்பதை எவரும் தடுத்தல் இயலாது: இது அவசியமும்கூட. எல்லாச்சமயக்கொள்கைகளையும் ஏற்றுப் போற்றுவது

இந்து மதம். குறிப்பாக சைவம் எல்லாக் கோட்பாடுகளையும் தன்னகத்தேகொண்டு மிளிர்கின்றது; உலகமே சிவலிங்க வடிவாகவேயிருக்கிறது. இன்றைய சமுதாயப் பூசல்களுக்கு இளைஞர்கள் உள்ளத்தே சமய அறிவைப் புகட்ட வேண்டுவது இன்றியமையாததாக இருக்கின்றது. சமயத்துறை என்பது முதியவர்களுக்கும், குறிப்பிட்ட சிலருக்கும் என்ற நிலைமாறி வருங்காலத்தை உருவாக்கும் இளைஞர்கட்கு உரிமையுடையதாதல் வேண்டுமெனக் குறிப்பிட்டு அப்பர் பெருமான் பெரிய ஞானியர்கள் வரிசையில் வைத்து எண்ணத் தக்கவர்கள். உலகை வாழ்விக்கும் கடமை மேற்பட்ட காலத்தே தோன்றும் தலைசிறந்த ஞானிகளில் அப்பர் சுவாமிகளுக்குத் தனியிடம் உண்டு என்றும் குறிப்பிட்டார்கள் ஆங்கிலத்தில் அவர் இயற்றிய உரையை சிதம்பரம் ஆர் சி. டி உயர்பள்ளித் தலைமையாசிரியர் திரு பி. ஆர். சுவாமிநாதன் மொழி பெயர்த்தார்

அறநிலையத்துறைத்துணை ஆணையர் திரு ஏ.ராஜா அவர்கள் தலைமையுரையில் திருவாமூர்வாசிகளுடைய விழாக் கழகத்தினரும் இச்சிற்றூரில் பெருவிழா எடுப்பதைப் பாராட்டி, இலாகாவினர் உறுதுணை என்றும் இதற்கு உண்டு என்று குறிப்பிட்டு அப்பர் தேவாரக் கருத்துக்கள் சிலவற்றை விளக்கினார்கள்.

'அப்பர் வாழ்வில் மக்கள்' என்ற தலைப்பில் திரு பி ஆர். சுவாமிநாதன் அவர்களும், 'அடியவர்கள்' என்ற தலைப்பில் திரு வி சா. குருசாமி தேசிகர் அவர்களும், 'சமயம்' என்ற தலைப்பில் திரு. க. வெள்ளைவாரணனார் அவர்களும் சிறப்புரை ஆற்றினார்கள்.

பண்ணாராய்ச்சி மாநாடு :

29—4—'70 காலை 10 மணியளவில் தவத்திரு சோமசுந்தரத் தம்பிரான் அவர்கள் தொடக்கவுரை நிகழ்த்த பண்ணாராய்ச்சி மாநாடு தொடங்கியது. சுவாமிகள் தொடக்கவுரையில் தேவாரத் திருமுறைகளைக் கருத்துக் கண்ணோட்டத்துடன், இசை நுணுக்கத்துடனும் ஓதுவாமூர்த்திகள் பாடவேண்டும்; பழைய பண்களின் வடிவத்தை மாற்றாமல் பாடவேண்டியதும், அதே நேரத்தில் புதிய பல இராகங்களையும் நமது பண் முறையில் எப்படி இணைப்பது என்பதையும் ஓதுவாமூர்த்திகள் சிந்தித்து ஒரு முடிவுக்கு வரவேண்டும்; பழமையின் உருவத்தைச் சிதைக்காமல் புதுமையை எப்படி இணைக்கலாம் என்பதையும் அவர்கள் ஆராயவேண்டும்; இறைவன் 'ஏழிசையாய், இசைப்பயனாய்'

இருக்கின்றான். எனவே சுர ஞானம் உடையவர்களாக ஓதுவா மூர்த்திகள் இருப்பது பண்கள் மாற்றப்படாமல் இருப்பதற்குத் துணையாக இருக்கும்'' என்று குறிப்பிட்டார்கள்.

நிகழாண்டில் "திருமுறைக் கலாநிதி'' பட்டம் பெற்ற திருக்கடையூர் பிச்சைக்கட்டளை எஸ்டேட் தேவாரப் பாடசாலை தலைமையாசிரியர், திரு. மு. இரத்தினம் பிள்ளை அவர்கள் தலைமையேற்றார்கள். 'பழந்தக்கராகப் பண்' இவ்வாண்டு ஆராய்ச்சிக்குரிய பண்ணாக எடுத்துக்கொள்ளப்பெற்றது. தலைவர் பிள்ளையவர்கள் 'ஆரபி' இராகத்தில் பாடுவதுதான் பழமையான முறை என்று குறிப்பிட்டு அதனை இசைத்துக் காட்டினார்கள். பள்ளத்தூர் திரு. இரத்தினசபாபதி தேசிகர் அவர்கள் தற்போது 'பழந்தக்கராகப் பண்ணைப்' பாடிவரும் முறை 'சுத்தசாவேரி' இராகத்துடன் ஒத்துவருகிறது என்று கூறி அவ்வாறு பாடியும் காட்டினார்கள். திருமுறைக் கலாநிதி வேதாரணியம் திரு. மணி தேசிகர், சிதம்பரம் திரு. கனகசபை பிள்ளை மற்றும் பழமையான ஓதுவாமூர்த்திகள் பலரும் ஆரபி இராகத்தில் பாடி வருவதுதான் முறை என்று முடிவு கூற அனைவரும் ஒருமனதாக இக்கருத்தை ஏற்றுக்கொண்டனர். இப் பண்ணாராய்ச்சி மாநாட்டில் இருபத்தேழு ஓதுவாமூர்த்திகள் கலந்துகொண்டு சிறப்பித்தனர்.

பட்டி மன்றம் :

மாலை 6 மணிக்குப் பட்டி மன்றம் தொடங்கியது. 'அப்பர் சமயக் காவலரா? சமுதாயக் காவலரா?' என்ற பொருள்பற்றி நிகழ்ந்த பட்டி மன்றத்தைத் தமிழ்நாடு அறநிலையத்துறை அமைச்சர் மாண்புமிகு. கே. வி. சுப்பையா அவர்கள் தொடங்கி வைத்துப் பேசுகையில் "இறைவன் எங்கும் இருக்கிறான் என்ற தத்துவத்தை எல்லோரும் ஏற்றுக்கொள்வர்; குறிப்பிட்ட ஓரிடத்தில்தான் இறைவன் இருக்கின்றான் என்றால் இறைமைத் தத்துவம் முரணாகிவிடும்; பிரகலாதன் வரலாறு இறைவன் எங்குமிருக்கிறான என்ற தத்துவத்தை எடுத்துக் காட்டும் வரலாறாகும். சமுதாயம் சமயம இரண்டும் உயிர் உடல்போல் இணைந்து இருக்கிறபொழுதுதான சிறப்பாகும். இரண்டும் பிரிகிறபொழுது உயிரற்ற உடல்போல் ஆகிவிடும். சமுதாயம் சிறக்கிறபோதுதான் சமயம் சிறக்கும். சமுதாயம் அடிமையுற்ற காலத்தல் சமயம் சிறக்கமுடியாது'' என்று குறிப்பிட்டார்கள்.

நடுவர் தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள் "சமுதாயத்தோடு தொடர்பில்லாத சமயம் நாளடைவில் மங்கி

மறைந்துவிடும். இக்கருத்தை நம்முடைய சமயக் குரவர்கள் வாழ்வில் நன்கு விளக்கம் செய்திருக்கின்றார்கள். சமயத்தை உயிரெனப் போற்றிய அப்பர் பெருமான், சமுதாயத்தையும் கண்ணெனப் போற்றிப் பாராட்டியுள்ளார்'' என்று தமது தொடக்கவுரையில் கூறினார்கள்.

''அப்பர் சமயக் காவலரே'' என்று தவத்திரு ஊரன் அடிகள், திரு. தெ. ஞானசுந்தரம், செல்வி. இரா. ராஜேஸ்வரி, திரு . சுத்தரமூர்த்தி ஆகிய நால்வரும் வாதிட்டனர். ''அப்பர் சமுதாயக் காவலரே'' என்ற தலைப்பின்கீழ் விழுப்புரம திரு. ஆறுமுக முதலியார், செல்வி. அ. சுந்தரவல்லி, திரு. குமார அழகப்பன், திரு. ந. இராமலிங்கம் ஆகியோர் வாதிட்டனர்.

தவத்திரு அடிகளார் அவர்கள் தம் முடிவுரையில் ''அப்பர் சமுதாயக் காவலரே' என்று முடிவுகூறி, ''சமுதாயத்திற்காகத் தான் சமயமே தவிர, சமயத்திற்காக சமுதாயமில்லை; எனவே சமுதாயத்தைத் திருத்தினால்தான் சமயம் வாழும் என்று கண்டு அவர்களிடையே அப்பர் பெருமான் தொண்டாற்றினார்'' என்று பல மேற்கோள்களை எடுத்துக்காட்டினார்கள்.

கருத்தரங்கு :

30—4—70 குருபூசைத் திருநாளன்று காலை 9 மணியளவில் நிகழ்ந்த கருத்தரங்கிற்கு அறநிலையத்துறை ஆணையர் திரு. கே. எஸ் நரசிம்மன் அவர்கள் தலைமையேற்றார்கள். அவர் தம் தலைமையுரையில் ''தமிழ் நாட்டில் கற்கோயில்கள் எழுவதற்குக் காரணமாக இருந்தவர் அப்பர் சுவாமிகள் ஆவார்கள். அப்பர் பல்லவ மன்னனை சைவ நெறிக்கு மாற்றவில்லை என்றால் எண்ணற்ற கற்கோயில்களை இன்று நாம் காண இயலாது; உழவாரப் படையெடுத்து, கோயில்களைச் சுத்தம் செய்த முதல் சமயாசிரியர் அப்பர் சுவாமிகளே. இன்றைக்குக் கோயில்களில் செடி கொடிகள் மண்டி இருப்பினும் பக்தர்களோ நிர்வாகிகளோ அதை அகற்ற வேண்டுமென்பதில் கருத்தற்று இருக்கிறார்கள். அதனால் அறநிலையத்துறை சார்பாக ஐயாயிரம் உழவாரம் செய்து கோயில்களுக்குக் கொடுக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அப்பர் கருத்துக்கள் இன்றைய நிலையில் சமுதாயத்தில் வேரூன்றுமானால் சமுதாயம் முன்னேற்றமடையும் என்பதில் ஐயமில்லை'' என்று குறிப்பிட்டார்கள்.

சிறப்புரை நிகழ்த்திய 'திருவாசகமணி' திரு. கே. எம். பால சுப்பிரமணியம் அவர்கள் ''அப்பர் பெருமான் மிகப்பெரிய

சமுதாய மறுமலர்ச்சிக்கு வித்திட்டவர்கள். சமயத்தின்கண் வேரூன்றிய சாதிமத சழக்குகளை எதிர்த்து முதல் முழக்கமிட்டவர்கள் தமிழ் மொழியின் மறுமலர்ச்சிக்குப் புதிய கோணத்தில் வளம் பெருக்கி நலம் விளைத்தவர்கள் என்பதை எடுத்துக்காட்டி' சமய நுட்பங்களையெல்லாம் அப்பர் பெருமான் எங்ஙனம் விளக்கிச் செல்கிறார்கள் என்பதைத் தக்க மேற்கோள்களுடன் சிறப்பாக எடுத்துரைத்தார்கள்.

கவியரங்கம் :

மாலை 7 மணியளவில் கவியரங்கம் தொடங்கியது. திருவாசக மணி திரு. கே. எம். பாலசுப்பிரமணியம் கவியரங்கத் தலைமை யேற்றுப் புத்தம் புதிய கவி தொடுத்து மேடையிலேயே பாடினார்கள். ' அப்பர் கவிதைகளில் அகங்குழைந்து நின்றிருந்தேன்'' ஏனென்றால்......? என்ற தலைப்பின்கீழ் திருவாளர்கள். மா. வே. பசுபதி. தெ. ஞானசுந்தரம், இரா. செல்வக்கணபதி, குமார அழகப்பன், அ. பாலருவாயன், செல்வன் இரா. இளங்கோ ஆகியோர் கவிதை தொடுத்து அரங்கேற்றினர். திரு. சொ. சிங்காரவேலனார் எழுதியனுப்பிய கவிதையைத் திரு. கண்ணன் படித்தார். தவத்திரு தம்பிரான் சுவாமிகள் நன்றி கூறியபின் இரவு 10 மணியளவில் மாநாட்டு நிகழ்சிகள் இனிதே நிறைவெய்தின.

மூன்று நாள் மாநாட்டுக்கும் பல்லாயிரக்கணக்கான அன்பர்கள் தாய்மார்கள் குழந்தைகளுடன் வந்திருந்து சிறப்பித்தனர். மாநாட்டு நிகழ்ச்சிகளைத் திருச்சி வானொலி நிலையத்தார் பதிவு செய்து ஒலிபரப்பினர்.

பட்டமும் பாராட்டும் :

குருபூசை விழாவையொட்டி 28—4—70 காலை கணபதி ஹோமமும் 29—4—70 காலை நவக்கிரக ஹோமமும். 30—4—70 குருபூசையன்று மகன்யாசபூர்வமாக ஏகாதச ருத்ர ஜபஹோமமும் அப்பர் ஆலயத்தில் வேதாகம முறைப்படி நிகழ்த்தப் பெற்றது. விசேஷ அபிஷேக ஆராதனைகள் மூன்று நாட்களிலும் நிகழ்த்தப்பெற்று. பகல் 1 மணிக்கும் இரவு 10 மணிக்கும் சோடசோபசார தீபாராதனைகள் சிறப்பாக நடத்தப்பெற்றன.

குருபூசை விழாவன்று விசேட அபிஷேக ஆராதனைகள் நிறைவுற்றப்பின் திருக்கடவூர் பிச்சைக்கட்டளை தேவார பாடசாலைத் தலைமையாசிரியர் திரு. மு. இரத்தினம் பிள்ளை அவர்களுக்குக் குருபூசை விழாக் கழகத்தினர் சார்பில் 'திருமுறைக் கலாநிதி' என்ற சிறப்புப் பட்டம் பொறிக்கப்பட்ட பொற்பதக்கம் வழங்கி, தவத்திரு சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் பொன்னாடை போர்த்தி ரூபாய் 501 கொண்ட பண முடிப்பும் வழங்கிப் பாராட்டினார்கள்.

திருவீதிப்பெருவிழா :

இரவு சிவபுரி பத்மநாபன் குழுவினர் நாதசுர இசை முழங்க 27 ஓதுவாமூர்த்திகள் பண்ணொன்றிய இசையுடன் தேவாரம் ஓதிவர, அப்பர் பெருமான் திருவீதி உலா பல்லாயிரக்கணக்கான பக்தர்கள் பக்திப் பரவசத்துடன் பங்குகொள்ள சிறப்பாக நடந்தேறியது.

இரண்டாம் நாள் நிகழ்ச்சியில் 27 ஓதுவாமூர்த்திகள் நாள் முழுவதும் தேவாரத் திருமுறையை அகண்ட பாராயணமாக நிகழ்த்திச் சிறப்பித்தனர்.

தமிழ்நாடு தெய்வீகப் பேரவையினர் நாள்தோறும் சமயத் திரைப்படக் காட்சிகளைத் திரையிட்டு மக்களை மகிழ்வித்தனர்.

---

## திருநெறிய தெய்வத் தமிழ் மாநாடு

தருமையாதீனக் குருமுதல்வர் ஸ்ரீ குருஞானசம்பந்தர் குருபூஜை விழாவையொட்டி திருநெறிய தெய்வத் தமிழ் மாநாடு ஆண்டுதோறும் நிகழ்வதுபோல இவ்வாண்டும் சிறந்த முறையில் 17—5—70 ஞாயிற்றுக்கிழமைமுதல் 27—5—70 செவ்வாய்க் கிழமை முடிய உள்ள நாட்களில் நடைபெற்றது. மாநாட்டில், கவியரங்கம், கருத்தரங்கம், பட்டிமன்றம், இன்னிசையரங்கு முதலிய நிகழ்ச்சிகள் நடைபெற்றன. மாநாடு ஒவ்வொரு நாளும் மாலை 6-மணிமுதல் தொடங்கி நடைபெற்றது.

17—5—70 ஞாயிற்றுக்கிழமை திருநெறிய தெய்வத் தமிழ் மாநாட்டை, தமிழ் நாடு இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை ஆணையர், திரு K. S. நரசிம்மன், B A., B. L., I. A. S. அவர்கள் தொடங்கி வைத்தார்கள். தொடக்கவுரையில் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள் ஆற்றிவரும் சமய, சமுதாய, சமூகப்பணி களையும், கல்விப்பணிகளையும் பாராட்டிக்கூறி, ஆதீனத் திருக் கோயில்கள் முன்மாதிரியாக விளங்குகின்றன என்றும், நூல் வெளியீடுகள் பல மக்களுக்குப் பயன்படும் வகையில் வெளியிட்டு வழங்கப்படுகின்றன என்றும், சமயப் பிரசாரப்பணியும் தேவைக் கேற்பச் செய்யப்படுகின்றன என்றும் கூறி மாநாட்டில் கவியரங் கம், கருத்தரங்கம், பட்டிமன்றம், இன்னிசை நிகழ்ச்சிகள் முதலியவற்றை அமைத்திருப்பது பலதரப்பட்ட மக்களும் கலந்துகொண்டு பயன்பெற வாய்ப்பாக இருக்கிறது. அதை மக்கள் பயன்படுத்திக்கொள்ளவேண்டும் என்றுகூறி மாநாட் டைத் தொடங்கி வைத்தார்கள்.

அடுத்து, அன்று நிகழ்ந்த "வழிவழிவந்த மரபு" என்ற பொருள்பற்றிய கவியரங்கத்திற்குத் திருவாசகமணி, திரு. K. M. பாலசுப்பிரமணியம் அவர்கள் தலைமையமர்ந்து கவிதையி னுலேயே ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்களது பொற்பாத கமலங்களுக்கு வணக்கங்கூறி, கவியரங்கில் கலந்துகொண்ட புலவர் பெருமக்களையும் அறிமுகம் செய்துவைத்தார்கள்.

கவியரங்கத்தில் ஈரோடு புலவர், திரு. செகதீசன் (தமிழன் பன்), காரைக்குடி அழகப்பா கல்லூரித் தமிழ் விரிவுரையாளர் வித்துவான், திரு பூ. அமிர்தலிங்கம் M. A., மாயூரம் அ வ. அ. கல்லூரித் தமிழ் விரிவுரையாளர், செஞ்சொற்கொண்டல்,

வித்துவான், திரு. சொ. சிங்காரவேலன் M. A, தருமையாதீனம் வித்துவான், ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் ஆகியோர் முறையே கபிலர், அப்பர், மெய்கண்டார், குருஞான சம்பந்தர் என்ற அருட்புலவர்களது அருள்வரலாற்றைக் கவிதை வடிவில் யாத்துக் கவிதைமழை பொழிந்தனர். அவரவரும் தம் தம் கவிதையைச் சொல்லணி, பொருளணிகளும், கற்பனைகளும் பொருந்த இயற்றியிருந்தது குறிப்பிடத்தக்கது.

18—5—70 திங்கட்கிழமை புறநானூற்றில் விஞ்சி நிற்கும் பண்பு வீரமா? அறமா? என்ற தலைப்பில் நிகழ்ந்த பட்டி மன்றத்திற்கு, ஈரோடு திரு. க. கு. கோதண்டராமன் M. L. C., அவர்கள் நடுவராக இருந்து ஆற்றிய தொடக்க உரையில், தமிழன் பண்பாடும் வாழ்வும் ஒருங்கே அமைந்த நூல் புற நானூறு, இது காலத்தால் கருத்தால் அழியாத நூல். இது தமிழகத்தின் காலக்கண்ணாடியாகத் திகழ்கின்றது. இதில் விஞ்சி நிற்கும் பண்பு வீரமா? அறமா? என்பதை நாம் திறனாய்வுடன் காணவேண்டும். பழங்காலக் கருத்துக்களை முறையாக உணரும் தமிழக வரலாறாக இது திகழ்கின்றது என்று கூறி, பட்டி மன்றத்தின் விதிமுறைகளையும் கூறி, இருதிறத்திலும் பேச இருக்கும் அறிஞர்பெருமக்களை அறிமுகம் செய்து பட்டிமன்றத்தைத் தொடங்கி வைத்தார்கள்.

வீரமே விஞ்சிநிற்கும் பண்பு என்று வாதிடும் கட்சியில் சென்னை திரு. மறை. திருநாவுக்கரசு, சென்னை. திரு ஞான சுந்தரம் M. A., மாயூரம் அரசினர் மகளிர் உயர்பள்ளித் தமிழ் ஆசிரியை, வித்துவான். திருமதி, துரை. வள்ளி ஆகியோர் வாதிட்டனர்.

புறநானூற்றில் விஞ்சி நிற்கும்பண்பு அறமே என்ற கட்சியில் தஞ்சாவூர் புலவர், திரு. க. முருகையன் M. L. A., கடலூர், புலவர், திரு. ஒ. அறிவுடைநம்பி M. L. C., தருமையாதீனப் பல்கலைக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியை திருமதி. ப. நீலா ஆகியோர் வாதிட்டனர். இருதிறத்தவரும் தம்தம் கட்சியில் பேச எடுத்துக்கொண்ட கருத்துக்களைச் சிறந்த முறையில் எடுத்து விளக்கி நிலைநாட்டினர். நடுவர் திரு. க கு. கோதண்ட ராமன் M. L. C., அவர்கள் நம்பேச்சும் மூச்சும் அறம் என்றும் அதற்கு அடுத்தது வீரம் என்றும், அறத்தின் வழிவந்ததே வீரம் என்றும், அதனை வலியுறுத்த எழுந்தனவே புறநானூற்றுப் பாடல்கள் என்றும் கூறித் தமது உரையை நிறைவுசெய்தார்கள்.

பட்டிமன்றத்தை அடுத்து பிடில் இன்னிசை நிகழ்ந்தது. லால்குடி திரு ஜெயராமன் அவர்களும், திருமதி ஸ்ரீமதி பிர்மானந்தம் அவர்களும் சேர்ந்து பிடில் வாசித்தனர். உமையாள் புரம் திரு சிவராமன் அவர்கள் மிருதங்கம் வாசித்தார்கள்.

19—5—70 செவ்வாய்க்கிழமை திருக்குறளில் வள்ளுவர் காட்டும நெறி இம்மையா? மறுமையா? என்ற தலைப்பில் நிகழ்ந்த பட்டிமன்றத்திற்கு, சென்னை பன்மொழிப்புலவர், திரு. கா. அப்பாத்துரை M. A,, (தமிழக ஆட்சி மொழிக்குழு) அவர்கள் நடுவராக இருந்தார்கள்.

இந்த விழாவை நடத்திவரும் இந்த ஆதீன மடம் திருவள்ளுவர் காலத்தில் இருந்திருந்தால் பல தமிழ் நூல்கள் அழிந்து போயிருக்காது. அந்த அளவிற்கு இந்த ஆதீனம் தூய தமிழ்ப் பணி செய்துவருகிறது. இந்தத்திருக்குறள் பலவல்லுநர்களால் போற்றப்பட்ட நூல் என்று கூறி, திருக்குறளில் அமைந்துள்ள பால் பகுப்புகள் முதலான வற்றைப் பற்றி ஆய்வுரை நிகழ்த்தி பட்டிமன்றத்தைத் தொடங்கி வைத்தார்கள்.

சென்னை மாநிலக் கல்லூரிப் பேராசிரியர், டாக்டர் திரு. மெ. சுந்தரம் M. A. M. Litt, Phd, அண்ணாமலைப் பல்கலைக் கழகப் புலவர் திரு. சோம இளவரசு, சென்னை மணலி தமிழ்க் கல்லூரிப் பேராசிரியர் வித்துவான். திரு. இரா. செல்வக்கணபதி ஆகியோர் வள்ளுவர் காட்டும் நெறி இம்மையே என்று சான்றுகள் பலகாட்டி வலியுறுத்திப் பேசினர். மதுரை தியாகராசர் கல்லூரிப் பேராசிரியர் டாக்டர். திரு தமிழண்ணல் M. A. Phd. கரந்தைப் புலவர் கல்லூரிப் பேராசிரியர், பாவலரேறு திரு. ச. பால சுந்தரம், சென்னை மேரி அரசி கல்லூரி விரிவுரையாளர் திருமதி சாரதா நம்பியாரூரன் ஆகியோர் வள்ளுவர் காட்டும் நெறி மறுமையே என்பதை பல குறள் மேற்கோள்களுடன் வலியுறுத்திப் பேசினர். நடுவர் அவர்கள். இம்மை மறுமை இரண்டையும் தம் நூலில் வலியுறுத்தியுள்ளார் என்பதை விளக்கித் தீர்ப்பு வழங்கினர்கள்.

20—5—70 புதன்கிழமை, திருமுறையைச் சிவபெருமான் பெரிதும் விரும்பி கேட்பதற்குக் காரணம் புகழ்வேட்பா? உயிர்கள் உய்விற்கா? என்ற பொருளில் நிகழ்ந்த பட்டிமன்றத்திற்குத் அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழாராய்சித் துறைத் துணைப்பேராசிரியர், திருமுறை ஆராய்ச்சிக்கலைஞர், வித்துவான் திரு க. வெள்ளைவாரணனர் அவர்கள் நடுவராக

இருந்து ஆற்றிய உரையில், சிவபெருமான் திருமுறைகளை விரும்பிக்கேட்டார் என்பதில் யாருக்கும் ஐயம்இருக்கமுடியாது. நாயன்மார்களுடைய வரலாற்றில் உள்ள பல நிகழ்ச்சிகள் திருமுறைகளைப் பெருமான் விரும்பிக் கேட்கிறான் என்பதற்குச் சான்றாக விளங்குகின்றன என்று கூறிப் பட்டிமன்றத்தைத் தொடங்கி வைத்தார்கள். திருப்புத்தூர் பேராசிரியர், திரு. பா. நமசிவாயம் எம். ஏ., புத்தனூம்பட்டி தமிழ் விரிவுரையாளர், திரு. அ.இராசகோபாலன்எம்.ஏ , தருமையாதீனப் பல்கலைக்கல்லூரிப் பொறுப்பு முதல்வர், வித்துவான் திரு. வி. சா. குருசாமி தேசிகர் ஆகியோர் சிவபெருமான் திருமுறையைப் பெரிதும் விரும்பிக் கேட்பதற்குக் காரணம் புகழ் வேட்பே என்ற வாதத்தில், கலந்துகொண்டு விரிவுரை நிகழ்த்தினர்.

மதுரை தியாகராசர் கல்லூரிப் பேராசிரியர் திரு. அ. சங்கர நாராயணன் எம். ஏ., எம். லிட். பி. டி. மாயூரம் அ வ அ. கல்லூரித் தமிழ் விரிவுரையாளர் திரு. அ. கலியபெருமாள் எம். ஏ. பள்ளத்தூர், சீதாலட்சுமி ஆச்சி கல்லூரிவிரிவுரையாளர் திருமதி. சரசுவதி இராமநாதன் எம். ஏ., ஆகியோர், சிவபெருமான் திருமுறையைப் பெரிதும் விரும்பிக் கேட்பதற்குக் காரணம் உயிர்கள் உய்விற்கே என்ற வாதத்தில் கலந்துகொண்டு சொற்பெருக்கு ஆற்றினர். இருதரப்பினரும் தங்கள் வாதத்தை நிறுவ திருமுறைப் பாடல்களையும் பிறபாடல்களையும் சான்றுகளாகக் காட்டினர்.

"சொற்றமிழ் பாடுக என்றார் தூமறை பாடும் வாயார்" என்பது பெருமானின் புகழ்ச்சி விருப்பத்திற்குச் சான்றாகச் அமையலாம். வேண்டுதல் வேண்டாமை இல்லாதவன் இறைவன். அவ்விலக்கணப்படி இறைவன் உயிர்களை உய்விக்கிறான். இறைவன் புகழை விரும்பியதற்குக் காரணம் அடியவர்கள் பெருமையை உலகம் உணரச்செய்வதற்காகவே; அதன்மூலம் உயிர்களை உய்விக்கவும் செய்கின்றான் என்றுகூறி இறைவன் புகழ் வேட்பின்மூலம் உயிர்களின் உய்வைச் செய்கின்றான் என்று நடுவர் அவர்கள் தமது தீர்ப்பைக் கூறினார்கள்.

21—5—70 வியாழக்கிழமை சாத்திரங்களில் ஆன்ம ஈடேற்றத்திற்கு இன்றியமையாதது விதிமுறையா பக்திமுறையா என்ற பொருளில் நிகழ்ந்த பட்டிமன்றத்திற்குக் கடலூர் திரு அ. நடேச முதலியார் அவர்கள் நடுவராக இருந்து சாத்திரங்கள் ஆன்ம ஈடேற்றத்திற்கான வழிவகைகளை விளக்குகின்றன. உலகியல் வாழ்விலேயே ஈடுபட்டுழல்கின்ற காரணத்தால்

மக்கள் அவற்றை எளிதில் உணர முடியாத நிலையில் இருக்கின்றனர். உணர்வார்க்கு அவை இன்பம் பயப்பனவாக அமைந்துள்ளன என்று கூறிப் பட்டிமன்றத்தைத் தொடங்கி வைத்தார்கள். அண்ணாமலைப்பல்கலைக் கழகம் மெய்ப்பொருள் துறை திரு. வை. இரத்தினசபாபதி எம். ஏ., திருப்பனந்தாள் செந்தமிழ்க்கல்லூரிப் பேராசிரியர், வித்துவான், திரு. எம். சுந்தரேசம் பிள்ளை ஆகிய இருவரும் விதிமுறையே ஆன்ம ஈடேற்றத்திற்கு இன்றியமையாதது என்ற பொருளில் பேசினர். அண்ணாமலைப்பல்கலைக்கழக மெய்ப்பொருள்துறை விரிவுரையாளர் திரு. சி. இராமலிங்கம் எம். ஏ., விருதுநகர் செந்திற்குமார நாடார் கல்லூரி விரிவுரையாளர் திருமதி. தி. சுந்தராம்பாள் எம் ஏ., ஆகிய இருவரும் ஆன்ம ஈடேற்றத்திற்கு இன்றியமையாதது பக்தி முறையே என்ற தலைப்பில் பேசினர். நடுவர் அவர்கள் பக்திமுறை விதிமுறை இரண்டும் ஆன்ம ஈடேற்றத்திற்கு இன்றியமையாதது என்று கூறித் தீர்ப்பு வழங்கினார்கள்.

(தொடரும்)



## விசேஷ நாட்கள்

### 10—6—70 முதல் 11—7—70 முடிய

17—6—70 பிரதோஷம்

27—6—70 ஏயர்கோன் கலிக்காம நாயனார்

30—6—70 கிருத்திகை

1—7—70 பிரதோஷம்

7—7—70 மாணிக்கவாசக சுவாமிகள்

8—7—70 அமர்நீதி நாயனார்

10—7—70 ஆனித்திருமஞ்சனம்





# செய்திகள்



தருமையாதீனத்தில் :

## ஸ்ரீ ஞானபுரீசுவரர் மகோற்சவம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம் ஸ்ரீ ஞானம்பிகை சமேத ஸ்ரீ ஞானபுரீசுவரசுவாமி திருக்கோயிலில் 17—5—70 ஞாயிற்றுக்கிழமை முதல் மகோற்சவம் தொடங்கி நடைபெற்றது. 17—5—70 அன்று கொடியேற்றமும், 21—5—70 அன்று இடப வாகனக் காட்சியும், 23—5—70 அன்று திருக்கல்யாணக் காட்சியும் மின்விளக்குகளால் ஒப்பனை செய்யப்பெற்ற வெள்ளி ரதத்தில் வீதியுலாவும், புஷ்பவிமானக் காட்சியும், 25—5—70 அன்று திருத்தேர்த் திருவிழாவும், 26—5—70 அன்று திருமடாலயத்திற்கு எதிரிலுள்ள திருக்குளத்தில் ஸ்ரீ நடராஜப் பெருமான் தீர்த்தங்கொடுத்தருளலும், காவிரியில் பஞ்சமூர்த்திகள் தீர்த்தங் கொடுத்தருளலும் இரவு கொடியிறக்கமும் நடைபெற்றன. திருவிழா நாட்களில் காலை மாலை இரு வேளைகளிலும் சிறந்தநாத சுர இன்னிசை நிகழ்ச்சிகளும், தக்க பக்கவாத்தியங்களுடன் திருமுறைவாணர்களால் திருமுறைப் பாராயணமும், வேத சிவாகம பாராயணமும் நிகழ்ந்தன. மகோற்சவத்தை முன்னிட்டு கீழ்த் திசையில் சிறந்த வேலைப்பாட்டுடன் கூடிய முகப்பும் வடதிசையில் அழகிய வேலைப்பாட்டுடன் கூடிய மண்டப அமைப்பில் செய்யப்பெற்ற முகப்பும் விழாப்பந்தலை அழகுசெய்தன. அங்கே செய்யப்பட்ட மின்விளக்கு வேலைப்பாடுகள் அழகுக்கு அழகு செய்வனவாக இருந்தது. பந்தல் முகப்பில் சமயாசாரியர் நால்வரின் திருவுருவப்படம் விளங்கியது, மடாலயத்திற்கு வருவோர் உள்ளத்தில் சமய உணர்வைத் தட்டி எழுப்புவதாக அமைந்திருந்தது. மகோற்சவ நாட்களில் ஆதீன மடாலய முகப்பில் உள்ள திருநெறிய தெய்வத்தமிழ் மாநாட்டு மேடையில் திருநெறிய தெய்வத்தமிழ் மாநாடு சிறப்புற நிகழ்ந்தது.

## குருபூஜை விழா

தருமையாதீனக் குருமுதல்வர் ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிகபரமாசாரியசுவாமிகள் குருபூஜைவிழா 26-5-70 செவ்வாய்க்கிழமை மிகச்சிறப்பாக நடைபெற்றது. அன்று காலை ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் மேலை வீதியிலுள்ள

மேலக்குருமூர்த்த வழிபாட்டிற்கு எழுந்தருளி வழிபாடாற்றி னார்கள். தொடர்ந்து தமது ஆன்மார்த்த மூர்த்தியாகிய ஸ்ரீ சொக்கநாதப் பெருமானுக்குச் சிறப்பு வழிபாடு செய்தருளி னார்கள். திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் காசிவாசி இளவரசு ஸ்ரீலஸ்ரீ முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் எழுந்தருளி வழிபாடாற்றினார்கள். மாயூரம் முதலிய இடங்களி லிருந்து அன்பர்கள் பலர் வந்து வழிபட்டார்கள். பூஜையின் முதலில அன்பர்கள் பலர்க்கும் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகா சந்நிதானம அவர்கள் விபூதிப்பிரசாதம் வழங்கி அருள் பாலித்தார்கள். குருபூஜை விழாவில் அகத்தியர் தேவாரத்திரட்டு என்ற நூல் அன்பர்களுக்கு வழங்கப்பட்டது. பின்னர் ஸ்ரீ குருஞானசம்பந்தர் குருபூஜை விழாவை முன்னிட்டு ஸ்ரீ குருஞானசம்பந்தர் சமாதி கூடியருளிய ஸ்ரீ ஞானபுரீசுவரர் திருககோயிலில் ஸ்ரீ ஞானபுரீசுவரருக்கும் ஸ்ரீ ஞானம்பிகைக்கும் அபிஷேக ஆராதனைகள் சிறப்புற நிகழ்ந்தன. அபிஷேகத்தின் போது திருமுறைப்பாராயணம் செய்யப்பட்டது. பின்னர் திருமுறை அர்ச்சனையும் நிகழ்த்தப்பட்டது. ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமக சந்நிதானம் அவர்கள் எழுந்தருளிவழிபாடாற்றினார்கள் ஸ்ரீ காசிமடம் இளவரசு ஸ்ரீலஸ்ரீ முத்துக்குமாரசுவாமித்தம்பிரான் சுவாமிகளும் வழிபாட்டிற்கு எழுந்தருளியிருந்தார்கள். வழி பாட்டின் நிறைவில் ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருட்பிரசாதம் வைக்கப்பெற்ற பைகள் ஸ்ரீலஸ்ரீ கயிலைக்குருமகாசந்நிதானம் அவர்களால் அன்பர்களுக்கு வழங்கப்பட்டன. ஸ்ரீ தருமபுரீசர் திருக்கோயிலிலும், ஸ்ரீ அஷ்டாதசபுஜ மகாலட்சுமி துர்க்காம் பிகைத் திருக்கோயிலிலும் சிறப்பு வழிபாடுகள் நிகழ்ந்தன. வழிபாட்டிற்குப் பின்னர் மாகேஸ்வரபூஜை சிறப்புற நிகழ்ந்தது.

மாலையில் ஸ்ரீலஸ்ரீ கயிலைக்குருமகா சந்நிதானம் அவர்கள் காவிரித்திருமஞ்சனத்திற்கு சிறந்த நாதஸ்வர இன்னிசையுடன் எழுந்தருளி திருமஞ்சன வீதியில் உள்ள குருமூர்த்த தரிசனம் செய்து மீண்டு ஸ்ரீ குருஞானசம்மத்தர் கோயில் ஸ்ரீ துர்க்காம் பிகைத் திருக்கோயில் ஸ்ரீ தர்மபுரீசுவரர் திருக்கோயில்களில் வழிபாடு செய்து திருமடத்திற்கு எழுந்தருளினார்கள். பின்னர் ஸ்ரீ குருஞானசம்பந்தரால் வழிபடப்பெற்ற ஆன்மார்த்த மூர்த்தி யாகிய ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானுக்குச்சிறப்பு வழிபாடாக அபிஷேகமும் திருமெஞ்ஞான நிவேதனமும், ஆராதனைகளும் நிகழ்த்தி வழிபாடாற்றி கொலுவிற்றிருந்து கொலுக்காட்சி வழங்கியருளினார்கள். ஸ்ரீமத் சோமசுந்தரத்தம்பிரான் சுவாமிகள்

ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்களுக்குப் பாவனாபி ஷேகமும் ஆராதனைகளும் செய்து வழிபட்டார்கள். அன்பர்கள் பலர் கொலு தரிசனம் செய்து பிரசாதம் பெற்று மகிழ்ந்தனர்.

27—5—70 புதன்கிழமை பட்டணப்பிரவேசத் திருநாள் அன்று காலை ஸ்ரீலஸ்ரீ கயிலைக்குருமகா சந்நிதானம் அவர்கள், ஆலவாய்ப் பெருமான் அருளால் பொற்றாமரைப் பொய்கையி லிருந்து கண்ணுக்கினிய பொருளாகி குருஞானசம்பந்தரது திருக்கரத்தில்வந்த ஆன்மார்த்த மூர்த்தியாகிய ஸ்ரீ சொக்கலிங்க பெருமானை அபிஷேக ஆராதனைகளால் வழிபட்டுமகிழ்ந்தார்கள். திருவாவடுதுறை ஆதீனத்திலிருந்தும் மதுரை, குன்றக்குடி ஆதீனங்களிலிருந்தும் தம்பிரான் சுவாமிகள் வந்து சொக்க நாதப் பெருமானை வழிபட்டார்கள். சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி மாண்புமிகு. R. திரு. சதாசிவம் B. A., M. L.. அவர்களும் மற்றும் பல பெருமக்களும் வந்து வழிபட்டனர். ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் ஆதீனங்களிலிருந்து வருகை புரிந்த தம்பிரான் சுவாமிகளுக்கும் உயர்நீதிமன்ற நீதிபதி அவர்கட்கும் மரியாதைகள் செய்து திருநீற்றுப் பிரசாதம் அளித் தருளினார்கள். வழிபாட்டிற்கு வந்திருந்த அன்பர்கள் பலரும் பிரசாதம்பெற்று மகிழ்ந்தனர். பின்னர் மாஸேஸ்வரபூஜைசிறப்புற நிகழ்ந்தது.

மாலை 6 மணியிலிருந்தே பட்டணப்பிரவேசத்திற்கான முன்னேற்பாடுகள் நிகழ்ந்தன. வெளியூர்களிலிருந்தும். மாயூ ரத்திலிருந்தும் அன்பர்கள் பலர் வந்தவண்ணம் இருந்தனர். எடுபிடிகளும் ஆலவட்டங்களும் விளக்குகளும் அணி அணியாக நிறுத்தப்பட்டன. ஆதீனத் திருக்கோயில்களிலுள்ள யானைக ளெல்லாம் அணியாக அழகுடன் முன்னர் நிறுத்தப்பட்டன. வீதிகளிலெல்லாம் தோரணங்களாலும் மின்விளக்குகளாலும் ஒப்பனை செய்யப்பட்டன. நாதசுர இன்னிசைகள் முழங்கின. அதிர்வேட்டுகள் வானை அதிரச்செய்தன, இரவு 9 மணிஅளவில் பட்டணப்பிரவேசமாக ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் ஐந்தெழுத்தோதி சிவிகையில் ஆரோகணித்தார்கள். பட்டணப்பிரவேசத்திற்கு வந்திருந்த பெருமக்களுக்கு சிவிகை யில்எழுந்தருளியவாறே பூமாலைகள் அணிவித்து மரியாதைகள் செய்வித்தார்கள். வாண வேடிக்கைகள், பொய்க்கால் குதிரை ஆட்டம், மயில் டான்ஸ் முதலிய ஆட்டங்களும் நிகழ்ந்தன. சிவிகை, அன்பர்களாகிய மக்கள் வெள்ளத்தில் மிதந்து நகர்ந்து சென்றது. ஆங்காங்கே அன்பர்கள் பலர் தங்கள் தங்கள் வீடு களை ஒப்பனைசெய்து பூர்ணகும்பம் முதலியனவைத்து வரவேற்று

ஆராதனை செய்து வழிபட்டு மகிழ்ந்தனர். இரவு ஒருமணி அளவில் சிவிகை திருமடாலயத்தை அடைந்தது. பின்னர் ஸ்ரீலஸ்ரீ கயிலைக்குருமகாசந்நிதானம் அவர்கள் கொலுக்காட்சி வழங்கியருளினார்கள். அன்பர்கள் பலர் கொலு வழிபாடு செய்து பிரசாதம் பெற்று மகிழ்ந்தனர்.

## சித்தாந்தப் பாடவகுப்பு

ஸ்ரீ ஞானபுரீசுவரர் மகோற்சவ நாட்களில் நாள்தோறும் காலை 10 மணிமுதல் 12 மணிவரை ஸ்ரீ சொக்கநாதப்பெருமான் பூஜைமடத்தில் சித்தாந்தப்பாடவகுப்பு ஸ்ரீலஸ்ரீ கயிலைகுருமணி அவர்களது அருளால் நடைபெற்றது. தருமையாதீனப் பல்கலைக்கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் மகாவித்துவான். முதுபெரும்புலவர் சித்தாந்தக்கலைமணி, திரு. சி அருணை வடிவேல் முதலியார் அவர்களால் 'திருவருட்பயன்' என்னும் நூல் பாடமாக நடத்தப்பட்டது, ஆதீனத் திருமடத்துத் தம்பிரான் சுவாமிகளும் கல்லூரிப் பேராசிரியர்களும் மற்றும் பல நம் பாடத்தில் கலந்துகொண்டனர். 26—5—70 செவ்வாய்க் கிழமை காலை திருச்சி, திருக்நறள்வேள் திரு. ஜி. வரதராசப் பிள்ளை அவர்கள் தலைமையில் சித்தாந்தப் பாடவகுப்பு நிறைவுற்றது.

## திருவையாற்றில் சித்திரைத்திங்கட் பெருவிழா

தருமையாதீனம், திருவையாறு ஸ்ரீ பஞ்சநதீசுவரசுவாமி தேவஸ்தானத்தில் 12-4-70 ஞாயிற்றுக்கிழமை முதல் சித்திரைத் திங்கட் பெருவிழா தொடங்கி நடைபெற்றது. 12—4—70 இல் கொடியேற்றமும். 16—4—70 பெருமான் தனனைத்தான பூசித்தலும், ஐயாற்றுப்பெருமான் இடபவாகனத்தில் எழுந்தருளி சைவர்களுக்கு மாகேஸ்வர பூஜை செய்தலும், ஆறுஊர் சுவாமிகள் எழுந்தருளலும், 18-4-70 இல் கோரதக்காட்சியும், 20-4-70 திருத்தேர்த் திருவிதியுலாவும், 21—4—70 இல் தீர்த்தம கொடுத்தருளலும், கொடியிறக்கமும், சப்தப்பிரதக்ஷிணம் செய்தருளலும், நிகழ்ந்தன. சப்தஸ்தானம் என்ற சிறப்புவிழா நிகழும் இடமாகிய ஐயாற்றில் சப்தஸ்தானத்திருவிழா 23—4—70 அன்று மிக்க சிறப்புடன் நிகழ்ந்தது. ஸ்ரீ நந்தியெம்பெருமான் ஸ்ரீ சுயசாம்பிகையுடன் மணக்கோலத்துடன் வெட்டிவேர்ச் சிவிகையிலும், ஸ்ரீ ஐயாறப்பர் அறம்வளர்த்தநாயகியாரோடு விசித்திரக்

கண்ணாடிச் சிவிகையில் ஏழூர்வலம் வருதலும், மறுநாள் அன்று ஏனைய ஆறு ஊர் மூர்த்திகள் எழுந்தருளிய பல்லக்குகளுடன் ஸ்ரீ ஐயாறப்பர் ஐயாற்றுக் கோயிலுக்குள் எழுந்தருளும் ஆனந்தக்காட்சியும் நடைபெற்றது. விழா நாட்களில் சமயச் சொற்பொழிவுகளும் நடைபெற்றன. 14—4—70 முதல் மதுரையாதீனம் யாழ்ப்பாணம் கிளைமடாலயம் ஸ்ரீமத் சுவாமிநாதத் தம்பிரான் சுவாமிகள் "இசையும் இறைவனும" என்ற தலைப்பில் இன்னிசைக்கதை நிகழ்த்தினார்கள். திரு. சி. அருணைவடிவேல் முதலியார், திரு. தி. பட்டுசாமி ஓதுவார், திரு. சொர்ணகாளீஸ்வரன் ஆகியோர் மூவர் தமிழ், திருவாசகம் சேக்கிழார்செந்தமிழ் என்ற தலைப்புக்களில் சொற்பொழிவாற்றினர். அன்பர்கள் பலர் திருவிழாவைக் கண்டும் சொற்பொழிவு நிகழ்ச்சிகளைக் கேட்டும் மகிழ்ந்தனர்.

## சீகாழியில் ஸ்ரீ சட்டைநாதர் சிறப்பு வழிபாடு

தருமையாதீனம் சீகாழி ஸ்ரீ சட்டைநாதசுவாமி தேவஸ்தானத்தில் ஸ்ரீ சட்டைநாதருக்குப் பதினைந்தாவது ஆண்டு சிறப்பு வழிபாடு 24—4—70 வெள்ளிக்கிழமையன்று நிகழ்ந்தது அன்று காலையில் ஸ்ரீ முத்துச்சட்டைநாதசுவாமி யதாஸ்தானத்திலிருந்து புறப்பாடாகி வலம்புரி மண்டபத்திற்கு எழுந்தருளியாகியது. பின்னர், அபிஷேக ஆராதனைகள் சிறப்புற நிகழ்ந்தன. அன்று இரவு புறப்பாடாகி யதாஸ்தானத்திற்கு எழுந்தருளியாகியது ஸ்ரீ முத்துச்சட்டைநாதசுவாமி புறப்பாட்டிற்கு ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளினார்கள். மலைக்கோயில் ஸ்ரீ சட்டைநாதப்பெருமான் புழுகாப்புத் தரிசனம் நிகழ்த்தியருளினார்கள்.

மலைக்கோயிலில் ஸ்ரீ சட்டைநாதருக்கு ஒவ்வொரு வெள்ளிக்கிழமைதோறும் புழுகாப்பு செய்யப்பெறும. இங்கு வழிபடச் செல்வோர் மிக்க தூய்மையுடன் செல்லக்கடவா இப்பெருமானைப் பலர் குலதெய்வமாகக்கொண்டு வழிபட்டுவருகின்றனர்.

வழிபாட்டிற்குப்பின்னர், அன்பர்களுக்கு ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் ஸ்ரீ சட்டைநாதப்பெருமான் பிரசாதம் வழங்கியருளினார்கள்.

சென்னை, தருமையாதீன மடாலய தேவாலய
சமயப் பிரசார நிலையத்தில்

## வேளூர் கிருத்திகைப் பிரசாதம் வழங்கும் விழா

வைத்தீஸ்வரன்கோயிலில் 6—5—70 புதன்கிழமையன்று கிருத்திகை விழா மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பெற்றது. சென்னை, தருமையாதீன சமயப் பிரசார நிலைய அன்பர்கள் உபயமாக அபிஷேக ஆராதனைகள் சிறப்பாக நடைபெற்றன. மேற்படி அபிஷேக சந்தனக்குழம்பு அர்ச்சனைப் பிரசாதங்கள் 7—5—70 வியாழக்கிழமை மாலை 7 மணிக்குச் சென்னை சமயப் பிரசார நிலைய மன்றத்தில் தமிழ்நாடு அரசின் பள்ளிக் கல்வி இணை இயக்குநர் திரு. R. சண்முகம் அவர்கள் தலைமையில் பிரார்த்தனை நிகழ்த்தி வழங்கப்பட்டன. தலைவர் அவர்கள் தமது தலைமையுரையில் ' என் உடல், நோய்வாய்ப்பட்டிருந்த பொழுது என் தாயார் சொற்படி வைத்தீஸ்வரன்கோயிலுக்குப் பிரார்த்தனை செய்துகொண்டு காணிக்கை செலுத்தி வழிபட்டேன அதனால் உடல நலமும உள நலமும் உற்றேன். ஆண்டு தோறும் இருமுறைக்குக் குறையாமல் வைத்தீஸ்வரன்கோயில் கிருத்திகை தரிசனத்திற்குச் சென்றுவருகிறேன், ஸ்ரீ செல்வ முத்துக்குமாரசுவாமி ஸ்ரீ அம்மையப்பரிடம் நடந்துகாட்டும் முறைமை நம்மை எத்தனையோவகையில் நல்வழிப்படுத்துகிறது. அங்கு நடைபெறும் அபிஷேகக் காட்சி வாழ்வில் ஒவ்வொருவரும் காணவேண்டிய காட்சியாகும் '' என்று குறிப்பிட்டார்கள். தவத்திரு சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் வரவேற்புரையும் நன்றியுரையும் கூறினார்கள் ஞானப்பிரகாசம், இராமலிங்கம் பிரார்த்தனை நிகழ்த்தினார்கள்.

---

## தோத்திரப்பாடல்

திருச்சிற்றம்பலம்

கள்ளார்ந்த பூங்கொன்றை மதமத்தம் கதிர்மதியம்
உள்ளார்ந்த சடைமுடியெம் பெருமானா ருறையுமிடம்
தள்ளாய சம்பாதி சடாயென்பார் தாமிருவர்
புள்ளானார்க் கரை யனிடம் புள்ளிருக்கு வேளூரே.

—சம்பந்தர்

திருச்சிற்றம்பலம்




ஜோதிஷார்ணவம்,

திரு. K. முத்துஜோதிடர்

( சாதாரணஹு ஆனிமீ 1௨ முதல் 32௨ முடிய )

( 15—6—70 முதல் 16—7—70 முடிய )

### 1. மேஷம் – அசுவதி – பரணி – கார்த்திகை ¼

மேஷராசி 9 பாதங்களும் மிச்ரமான பலன்களைத்தரும். புதிதாக உத்தியோகம் ஏற்படும். ஸ்தாவர ஜெங்கம சொத்துக்கள் விற்றலும் வாங்குதலும் ஏற்படும். வரவு செலவு சமமாகும். அடிக்கடி சரீரத்தில் வியாதிகள் கொஞ்சம் காட்டும். திங்கள், செவ்வாய் சுபமாகும்.

### 2. ரிஷபம் – கார்த்திகை ¾ – ரோஹிணி – மிருகசீர்ஷம் ½

ரிஷபராசி 9 பாதங்களும் அதிகமான நஷ்டத்தை உண்டு பண்ணும். அடிக்கடி அலைச்சல்களையும், காரியங்களில் தாமதத்தையும் உண்டுபண்ணும். புதிதாகத் தொழில் ஏற்படும். நண்பர்களின் உதவியாலும், தெய்வபலத்தாலும் ஜீவனம் அதிகரிக்கும். தூரதேசத்திலிருந்து அழைப்புப்பத்திரம் வரும். புதன், வியாழன் சுபமாகும்,

### 3. மிதுனம் – மிருகசீர்ஷம் ½ – திருவாதிரை–புனர்பூசம் ¾

மிதுனராசி 9 பாதங்களும், பூர்ணமாக சுபமான பலனைத் தரும். படிப்பு விருத்தியாகும். இடம் மாறுதல் உண்டாகும். புதிதாக வஸ்திராபரணச் சேர்க்கையும், சுபசோபனுதிகளும் அடிக்கடி சஞ்சாரங்களும், ஆரோக்யமும் உண்டுபண்ணும். வெள்ளி, சனி சுபமாகும்.

**4. கடகம் – புனர்பூசம் $\frac{1}{4}$ – பூசம் – ஆயில்யம்.**

கடகராசி 9 பாதங்களும் பூர்ணமாக சுபத்தை உண்டு பண்ணும். குடும்பத்தில் அடிக்கடி விவாஹம் முதலிய சுப காரியங்களும், படிப்பும் புதிதாக ஜீவனமும், கீர்த்தியும், மேலோர் பெரியோர்களின் அன்பினுல் காரிய சித்தியும் மேலோர் பெரியோர்களின் அன்பினுல் காரிய சித்தியும் உண்டாகும். ஞாயிறு, திங்கள் சுபமாகும்.

**5. சிம்மம் – மகம் – பூரம் – உத்திரம் $\frac{1}{4}$.**

சிம்மராசி 9 பாதங்களும் பூர்ணமாக சுபத்தைத்தரும். குடும்பம் ஓங்கும். புத்திரன் ஏற்படும். தூரதேசத்திலிருந்து அழைப்பு வரும். ஆரோக்யம் உண்டுபண்ணும். சகோதரர் களாலும், உறவினர்களாலும், நண்பர்களாலும் நன்மை உண்டாகும். செவ்வாய், புதன் சுபமாகும்.

**6. கன்னி – உத்திரம் $\frac{3}{4}$ – ஹஸ்தம் – சித்திரை $\frac{1}{2}$.**

கன்னியாராசி 9 பாதங்களும் மிச்ரமான பலனைத்தரும். ஆரோக்யம் உண்டுபண்ணும். தூரதேச சஞ்சாரமும், உற வினர்களின் நண்பர்களின் விவாஹங்கள் மூலம் அதிகமான செலவுகளும் உண்டுபண்ணும். வெகுகாலமாய் சாதிக்க முடியாத காரியங்கள் தெய்வ சக்தியால் சாதிக்க முடியும். வரவுக்கும் அதிகமான செலவு ஏற்படும். அடிக்கடி வைத்திய செலவுகள் ஏற்படும். புதிதாக ஜீவன லாபங்களையும், தொழில் விருத்தியையும் தரும். வியாழன், வெள்ளி சுபமாகும்.

**7. துலாம் – சித்திரை $\frac{1}{2}$ – சுவாதி – விசாகம் $\frac{3}{4}$**

துலாராசி 9 பாதங்களும் பூர்ணமாக சுபத்தைத்தரும். ஜீவனம் ஓங்கும் அடிக்கடி சஞ்சாரங்கள் ஏற்படும். பெரிய பிரதிஷ்டா பலன்களையும் யகாயாக யக்ஞங்களின் பலனையும் தரும். தெய்வசக்தி ஓங்கும். கீர்த்தி உண்டாகும். எதிர் பாராதபடி தனதான்யலாபமும், நஷ்டமான பொருள் வரத்தும் உண்டுபண்ணும். சனி, ஞாயிறு சுபமாகும்.

8. விருச்சிகம் – விசாகம் $\frac{1}{4}$ – அனுஷம் – கேட்டை.

விருச்சிகராசி 9 பாதங்களும் பூர்ணமாக சுபத்தைத்தரும். ஸ்திரசுகமான வாசமும், ஜீவன விருத்தியும், புத்திராதிகளால் நன்மையும், தெய்வபக்தியும், கீர்த்தியும், ஆரோக்யமும் உண்டுபண்ணும். திங்கள், செவ்வாய் சுபமாகும்.

9. தனுசு – மூலம் – பூராடம் – உத்திராடம் $\frac{1}{4}$.

தனுர்ராசி 9 பாதங்களும் மிச்ரமான பலனைத் தரும். வியாதி நிவர்த்தியாகும். குடும்பம் ஓங்கும். ஸ்திர சுகவாசமும், புத்திரர்களுக்கு மேல்பதவியும், எப்பொழுதும் சுபகாரியங்களால் அதிகமான செலவுகளும், மேலோர் பெரியோர்களின் ஆசியும் உண்டுபண்ணும். வரவு, செலவு சமமாக இருக்கும். புதன், வியாழன் சுபமாகும்.

10, மகரம் – உத்திராடம் $\frac{3}{4}$ – திருவோணம் – அவிட்டம் $\frac{1}{2}$

மகரராசி 9 பாதங்களும் பூர்ணமாக சுபத்தையே தரும். அடிக்கடி அதிகமாக அலைச்சல்களை உண்டுபண்ணும், மேல் பதவிகளை உண்டுபண்ணும். மேலோர், பெரியோர்களின் அன்பும் கீர்த்தி பத்திரமும், சௌக்கியமும் நாளுக்குநாள் அதிகமாகும். வெள்ளி, சனி சுபமாகும்.

11. கும்பம் – அவிட்டம் $\frac{1}{2}$ – சதயம் – பூரட்டாதி $\frac{3}{4}$,

கும்பராசி 9 பாதங்களும் பூர்ணமாக சுபத்தையே தரும். குடும்பம் ஏற்படும். இல்லற சுகம் ஓங்கும். புதிதாகத் தொழில் மூலம் கிரய விக்ரயங்கள் அதிகமாகும். ஸ்திரமான லாபமும் உண்டாகும். தீராத வியாதி நீங்கி ஆரோக்யம் ஏற்படும். எதிர்பாராத தன லாபங்களையும் தரும். தெய்வசக்தி ஓங்கும். ஞாயிறு, திங்கள் சுபமாகும்.

12. மீனம் – பூரட்டாதி $\frac{1}{4}$ – உத்திரட்டாதி – ரேவதி.

மீனராசி 9 பாதங்களும், பூரட்டாதி 4ம் பாதம் மாத்திரம் நன்மை இருக்காது. மற்றபடி உத்திரட்டாதி, ரேவதி நக்ஷத்திரங்களும் சுபத்தைத்தரும். தொழில் விருத்தியாகும்.

நஷ்டமான பொருள் வந்து சேரும். ஆரோக்யம் உண்டு பண்ணும். எப்பொழுதும் தெய்வத்தின் ஞாபகமாகவே இருக்கும். மகாயக்ஞ பிரதிஷ்டா பலன்களால் சுபம் உண்டாகும். செவ்வாய், புதன் சுபமாகும்.

குறிப்பு :- வைகாசிமீ 31உ ஞாயிற்றுக்கிழமை உதயாதி 57 நாழிகை 1 விநாடிக்கு சித்திரை நக்ஷத்திரம் 3ம் பாதத்தில் விருஷப லக்னத்திலேயே ஸ்ரீ லோகரக்ஷகரான ஸ்ரீ சூரியபகவான் விருஷபராசியிலிருந்து மிதுனராசியில் பிரவேசம் செய்கிறார். பிரவேச காலமாகிய உஷக்காலம் உத்தர மோக்ஷமானது. ஷ பிரவேச காலபலத்தால் தென்னாட்டில் பெய்யவேண்டிய பருவமழை காத்து முதலியவைகள் காலத்தில் ஆரம்பமாகி முன் கூட்டியே மஹாநதிகளில் பிரவாகம் வரத்தொடங்கி சாகுபடி காரியங்கள் ஆரம்பித்து சஸ்யவிருத்தியும் பிறகு சீக்கிரமே தான்ய விருத்தியும் ஏற்படும் காவேரி தீரம் சுபிக்ஷமடையும். மாத ஆரம்பத்தில் குரு வக்ரத்தை புதன் கிழக்குத் திசையும் அஸ்தமனத்தையும் அடைவதால் விந்தியோத்ரங்களில் பல மாறுதல்களும் துவீபாந்தரங்களிலும் அற்புதங்களும் ஏற்படும். உலகைக் கடவுள் காப்பார். ஆஸ்தீகர்களாலும் பக்த கோடிகளாலும் உலகம் காப்பாற்றப்படும். தெய்வசக்தி பிரகாசிக்கும்.

சுபம்.

---

திருநெறிய தெய்வத் தமிழ் மாநாட்டுக்கு

## மகாசந்நிதானங்கள் நீதிபதிகள் அமைச்சர்கள் வருகை

தருமையாதீனம் ஸ்ரீ குருஞானசம்பந்தர் குருபூஜை விழாவை முன்னிட்டு நடைபெற்ற திருநெறிய தெய்வத் தமிழ் மாநாட்டில் திருவண்ணாமலை ஆதீனம் குன்றக்குடி மகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ தெய்வசிகாமணி அருணாசல தேசிக பரமாசாரிய சுவாமிகள் (குன்றக்குடி அடிகளார் M. L. C.) அவர்களும், காஞ்சிபுரம், தொண்டைமண்டல ஆதீனம், மகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்களும், 22—5-70 வெள்ளிக்கிழமை நடைபெற்ற உரையரங்க நிகழ்ச்சியில் கலந்துகொண்டு அருளுரை வழங்கினார்கள்.

தமிழ்நாடு அரசு சட்டம் நீதித்துறை அமைச்சர் மாண்புமிகு S. மாதவன் அவர்கள் 22—5—70 அன்று உரையரங்க நிகழ்ச்சியைத் தொடங்கி வைத்தார்கள்.

தமிழ்நாடு அரசு சட்டப் பேரவைத் தலைவர் மாண்புமிகு புலவர் கா. கோவிந்தன் அவர்கள் 24-5-70 அன்று நடைபெற்ற கருத்தரங்க நிகழ்ச்சிக்கு தலைமையுரை வழங்கினார்கள்.

சென்னை உயர்நீதிமன்ற நீதிபதிகள் மாண்புமிகு திரு. N. கிருஷ்ணசாமி ரெட்டியார் B. A., B. L, அவர்கள் 25—5—70 அன்றும், மாண்புமிகு திரு. சதாசிவம் B. A.. M, L., அவர்கள் 27—5—70 அன்றும் நடைபெற்ற நிகழ்ச்சிகளுக்குத் தலைமையமர்ந்து விரிவுரை ஆற்றினார்கள்.

---

## தோத்திரப்பாடல்

திருச்சிற்றம்பலம்

பேரா யிரம்பரவி வானோ ரேத்தும்
பெம்மானைப் பிரிவிலா அடியார்க் கென்றும்
வாராத செல்வம் வருவிப் பானை
மந்திரமும் தந்திரமும் மருந்து மாகித்
தீராநோய் தீர்த்தருள வல்லான் தன்னைத்
திரிபுரங்கள் தீயெழத்திண் சிலைகைக் கொண்ட
போரானைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே ஆற்றநாள் போக்கி னேனே,

— திருநாவுக்கரசர்.

திருச்சிற்றம்பலம்

தருமையாதீனத்துக்குச்சொந்தமான புள்ளிருக்குவேளூர்

# ஸ்ரீ வைத்தியநாதசுவாமி தேவஸ்தானம்

# மகாகும்பாபிஷேக விழா மலர்

தென்னாட்டில் மிகச் சிறந்த பிரார்த்தனைத் தலமாக விளங்குவது புள்ளிருக்குவேளூர். சம்பாதி, சடாயு, இராம இலக்குமணர், வேதம், முருகன், சூரியன் முதலியோர் வழிபட்ட பெருமையுடையது இறைவன், தீராநோய் தீர்த்தருள்கின்ற வைத்தியநாதனாக விளங்குகிறான். முருகன் ஸ்ரீ செல்வமுத்துக் குமாரசுவாமி என்ற திருப்பெயரோடு கண்கண்ட தெய்வமாய் விளங்கிவருகின்றார். ஞானசம்பந்தர், நாவுக்கரசர் முதலிய அருளாளர்கள் பலரும் பாடிப் பரவிய திருத்தலம். மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற மூவகையாலும் சிறப்புற்ற இத்தலத் திருக்கோயிலைத் தருமையாதீனம் 25வது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் இராஜகோபுரங்கள், விமானங்கள் முதலிய அனைத்தையும் புதுப்பித்து 2—7—1969 அன்று ஜீரணோத்தாரண அஷ்டபந்தன சுவர்ணபந்தன மகாகும்பாபிஷேகம் செய்வித்தருளினார்கள். கும்பாபிஷேக விழாவின் சிறப்பு மலர் இது. இம்மலர் தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகா சந்நிதானம் அவர்களது வாழ்த்துரையுடனும், திருவாவடுதுறை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள், திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் முதலியோர் வழங்கியருளிய வாழ்த்துச் செய்திகளுடனும் வெளிவருகிறது.

வேதம், ஆகமம், இதிகாசம், புராணம், திருமுறை' சாத்திரம், தோத்திரம், இலக்கியம், கலை, சமயம், வாழ்வியல், திருக்கோயில், மருத்துவம், கல்வெட்டு ஆகிய பல தலைப்புக்களில் அறிஞர்கள் பலர் எழுதிய ஆராய்ச்சிக் கட்டுரைகள் இம்மலரை அணிசெய்கின்றன. டிம்மி 1x4. ஆர்ட்படங்கள். வெள்ளை கிளேஸ் காகிதங்கள். பக்கங்கள் 534. விலை ரூ. 14—00. பதிவஞ்சல் கட்டணம் ரூ. 1—00.

கிடைக்குமிடம் :— டிரஷரர். ஸ்ரீ வைத்தியநாத சுவாமி தேவஸ்தானம், வைத்தீஸ்வரன்கோயில், தஞ்சைமாவட்டம், தமிழ்நாடு.

Printed & Published by, K. Sundaresa Iyer, Agent Dharmapuram Adhinam at the Gnanasambandam Press, Dharmapuram (Mayuram) 10—6—70.